உங்கள் குடும்பத்தினரின்
உடல்நலம் ஓங்கியிருக்க
அவசியம் அளியுங்கள் மிகச்
சிறந்ததையே

# அவர்களுக்கு விவா கொடுங்கள்.




ASP/JIL-V-IA/73 TAM

விவா நூதன உணவு தொழில் நுட்பத்திறமையில் உருவானது. இதில் மற்ற ஆரோக்கிய உணவுப் பானங்களில் உள்ளதைப்போன்று தூய்மையான, முழுமை பெற்ற ஆடைப்பாலும் பார்லி மால்ட்டும் உள்ளன. ஆயினும் விவாவில் மட்டுமே கோதுமை மால்ட் அடங்கியுள்ளது.

கோதுமை மால்ட் எதற்கு?

எதற்கெனில், அதில் வளமைமிக்க கார்போஹைட்ரேட், புரதங்கள், விடமின்கள் மற்றும் கனிஜ சத்துக்கள் எளிதில் சீரணிக்கும் வகையில் சேர்க்கப்பட்டுள்ளன.

கோதுமை மால்ட் கலந்திருப்பதால் விவா அதிக அளவு ஊட்டச்சத்து உள்ளதாய், பூரணமான இன்சுவையோடு, வளமிக்க பொன்னிறம் கொண்டு, உடனடியாகக் கரையும் தன்மையோடு விளங்குகிறது.

ஆகவே, உங்கள் அன்றாட உணவிலுள்ள பற்றுக்குறைகளை ஈடுசெய்ய சரியான, போதுமான ஊட்டச் சத்து அளிக்கவேண்டுமென்றால் அதற்கு விவா போல வேறு எதுவும் சிறந்ததல்ல

மிகச் சிறந்ததையே தேர்ந்தெடுக்க இதோ அரியதொரு வாய்ப்பு.

விவாவையே தேர்ந்தெடுங்கள்.



# விவா

உற்சாகமான ஆரோக்கிய வளர்ச்சிக்கு தினமும் விவா.



இந்தியாவில் தயாரிப்போர்,
ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்.

# ராசி





பட்டுப் புடவைகள், கைத்தறிச் சேலைகள், துணி ரகங்கள் எல்லாம் நெசவின் நேர்த்தியில், நீடித்து உழைப்பதில், நியாயமான விலையில் நிகரற்று விளங்குவதால் பெரிதும் விரும்பப்படுகின்றன.



EP-RASI-81



**ராதா சில்க் எம்போரியம்**
சென்னை-600004.

**ராதா சில்க்கின்**
**ராசி**
**உன்னத வாழ்வுக்கு**
**ஆசி**

**ராதா சில்க் எம்போரியம்**
29, கோவிந்த் மஹால்
86-B, மரைன் டிரைவ், G. ரோடு.
பம்பாய்-400002.

சார்பு நிறுவனம்
**ராதா சில்க்ஸ்** 'தன் பில்டிங்ஸ்'
மவுண்ட் ரோடு, சென்னை-600002.

# வளரும் குழந்தைகளுக்கு வாய்ப்பான துணை இன்க்ரிமின்*!




துள்ளித் திரியும் கன்றுப் பருவம்.. ததும்பி வழியும் சக்தி...பொங்கிப் பெருகும் பூரிப்பான ஆரோக்கியம்!

இதுதான் வளரும் பருவம். உடலும் உள்ளமும் ஓங்கி வளரும் இச் சமயத்தில் உங்கள் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் வழங்கி வாருங்கள். பலனளிக்கும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, அதி முக்கிய அமினோ அமிலம், வளரும் பருவத்தில் அத்தியாவசியமான இவை அனைத்தும் அடங்கியது இன்க்ரிமின் டானிக்.

VITAMINS B1, B6, B12
LYSINE
WITH IRON
TONIC APPETITE STIMULANT

வளரும் பருவம்!

# இன்க்ரிமின்*

**இன்க்ரிமின் டானிக் வளரும் பருவத்தினருக்கு ஒரு வரப்பிரசாதம்**

டாக்டர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர் Lederle சையனமைட் இந்தியா லிமிடெட்டின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் சையனமைட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

SISTAS-INC-3068A TAM

# கல்கி இந்த இதழில்...

ஆனந்த, ஆனி 16
ஜூன் 30, 1974

**காரம் :**

- ☐ லஞ்ச ஊழலுக்குத் தஞ்சமளிக்கிறார்கள்!
- ☐ கண்டனத்துக்குரிய திரைப்படம்!

**சாரம் :**

- ☐ ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவும்!
- ☐ சிறுகதைகள் : ★ பி. வி. ஆர்.
  - ★ சூடாமணி
  - ★ கோவி. மணிசேகரன்
  - ★ குறும்பன்

மேலட்டை :

"சுற்றுலா மலரில் எங்களை விட்டு விட்டீர்களே!"

வண்ணப்படம்: கே. எஸ். ராமானுஜம்

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |



★

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# கவனத்தைக் கவர்ந்தவை



## நூற்றில் ஒரு வார்த்தை !

மக்களைக் கவர்ந்து அவர்களைக் கடுமையாக உழைக்க வைக்கக் கூடிய தேசிய லட்சியம் எதையும் அவர்கள் முன் அரசு சமர்ப்பிக்க வில்லை என்று அசோக் மேத்தா குறைப்பட்டுக் கொண்டிருக்கிறார். அகில இந்திய ஸ்தாபன காங்கிரஸ் மகாநாடு கல்கத்தாவில் நடந்த போது இப்படிப் பேசியிருக்கிறார்.

நூற்றில் ஒரு வார்த்தை.

எத்தனையோ முன்னேற்றம் அடைந்துள்ள அமெரிக்க மக்களுக்குக்கூட மேலும் முன்னேறவும் கடினமாக உழைக்கவும் ஒரு லட்சியம் தேவைப்பட்டது. சந்திர மண்டலத்தை வெற்றி கொள்வது என்ற லட்சியத்தை அவர்கள் முன் வைத்தார் கென்னடி. இல்லாது போனால் சுக வாழ்வே அவர்களைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி யிருக்கும் என்று பலர் நம்புகின்றனர். கென்னடி சமர்ப்பித்த லட்சிய நோக்கு நாடு முழுவதும் ஒரு புத்துணர்ச்சியை உருவாக்கிக் கடுமையாக உழைக்கத் தூண்டியது. விண்வெளித் துறையில் கிடைத்த வெற்றி அமெரிக்கர்களின் அன்றாட வாழ்க்கைக்குக்கூடப் பல விதங்களில் உதவி வருகிறது.

பாரத நாட்டில் விடுதலை முழக்கத்தை அண்ணல் காந்தியடிகள் எழுப்பியபொழுது மக்களுக்கு இருந்த ஆவேசம், ஊக்கம் எதுவும் இப்போது இல்லை. நமது தலைவர்கள் மக்களின் ஆசைகளை வளர்த்து விட்டார்கள்; ஆனால் அந்த ஆசைகளைப் பூர்த்தி செய்ய ஆற்றலும் உழைப்பும் மக்களிடமிருந்தேதான் வர வேண்டும் என்பதை உணர்த்தத் தவறி விட்டார்கள்.

'இந்திரா அரசைக் கவிழ்ப்பது எங்கள் நோக்கமல்ல; அதைவிடச் சோம்பலும் மனச் சோர்வும் மக்களை அடிமைப்படுத்தாமல் விரட்டியடிப்பதே முக்கியம். இதில் எங்களுடன் இந்திரா மட்டுமல்ல, நாட்டிலுள்ள மற்ற அனைவரையுமே ஒத்துழைக்க அழைக்கிறோம்' என்று அசோக் மேத்தா கூறியுள்ளார்.

ஸ்தாபன காங்கிரஸ் தெரிவித்துள்ள இந்த நல்லெண்ணத்தை ஸ்ரீமதி இந்திரா காந்தி

இந்தியா உதவிக்குழு
140 கோடி டாலர் உதவி
இந்தியா
கொடுக்கிற தெய்வம்....


"ஆட்டம் கண்டுவிட்டதா?
இதோ, ஆடானமி பில்ஸ்"

நமது நாட்டின் பொருளாதாரம் பற்றி ஒரு குரல் அழுதிருக்கிறது!

அரசின் சோஷலிஸ சித்தாந்தத்துக்கு ஏற்ப யோசனைகளைக் கூறும் அதன் பொருளாதார நிபுணர்களையும் அவர்கள் வகுத்துத் தந்துள்ள உருப்படாத பொருளாதாரக் கொள்கைகளையும் விளாசி யிருக்கிறது. நமக்குக் கதி மோட்சமே இல்லையோ என்று தோன்றும், அதை முழுவதும் படித்தால்!

இதைப் பார்த்துவிட்டு அண்மைக் காலத்தில் இந்தோனேஷியாவில் ஏற்பட்டுள்ள மகத்தான முன்னேற்றங்களை விவரிக்கும் ஒரு கட்டுரையை 'ஜெர்மன் இன்டர்நேஷனல்' பத்திரிகையில் படித்தால் நமக்குப் பொறாமையே ஏற்படுகிறது!

சுகர்னோவின் அரசியல் பைத்தியக்காரத் தனம் ஆண்டுக்கு அறுநூற்றி ஐம்பது சதவீதமாக உயர்ந்திக் கொண்டு போன பண வீக்கத்தைத் தற்போது 2.5 சதவீதமாகக் குறைத்துள்ளதை நம்ப முடியாத அதிசயம், அற்புதம் என்று வர்ணிக்கிறது இப்பத்திரிகை. இன்னும் பல துறைகளில் ஏற்பட்டுள்ள பல முன்னேற்றங்களை விவரித்து விட்டுக் கடைசியில் இந்த வியத்தகு சாதனைகளுக்கு முக்கிய காரணம், அமெரிக்காவில் பெர்க்லி சர்வகலாசாலையில் படித்துவிட்டுத் திரும்பிய ஐந்து இளம் பொருளாதார நிபுணர்களை இன்றைய ஜனாதிபதி ஸுகர்த்தோ பயன்படுத்திக் கொண்டதுதான் என்கிறது.

இந்தோனேஷியாவுக்கு விமோசனம் உண்டென்றால் இந்தியாவுக்கும் சிரமங்களிலிருந்து மீள வழியுண்டு. ஸுகர்த்தோ செய்தது போல், அரசியல் சித்தாந்தங்களால் கட்டுப்படாத, தேர்ந்த பொருளாதார அறிஞர்களைக் கொண்டு, நாட்டின் பொருளாதாரத்தை உயிர்ப்பிப்பதே அந்த வழி.

## வேண்டாம், விஷப் பரீட்சை!

சீனாவும் பிரான்ஸும் அணுகுண்டுகளை வெடித்தன. ஒரே நாளில் இரட்டை அதிர்ச்சியாக நாளிதழ்களில் இச்செய்திகள் வெளியாயின. கதிரியக்கம் பரவாமல் கட்டுப்படுத்திப் பூமிக்கடியில் வெடிக்கவில்லை. சூழ்நிலை கதிரியக்கத்தால் பாதிக்கப்படுமாறே வெடித்தன.

இதைக் கண்டித்து நமது பாரத அரசு ஏதாவது சொல்லி யிருக்கிறதா என்று நாளிதழ்களைத் தேடித் தேடிப் பார்த்தோம். ஒரு வரி அகப்படவில்லை!

எப்படிக் கண்டிக்க முடியும்? அதற்குரிய தார்மீக சக்தியைத்தான் நாம் இழந்து விட்டோமே!

இந்தியாவைப் பின்பற்றி வேறு பல நாடுகளும் அணுகுண்டு சோதனை நடத்த முற்படலாம் என்று உலகம் அஞ்சுகிறது. எதிர்காலத்துக்கு அணு ஆராய்ச்சி நிலையம் வழங்குவதாக நிக்ஸன் வாக்களித்த மறு கணம் அது ஒருவேளை அணு குண்டுச் சோதனைக்கும் பயன்படுத்தப்படலாம் என்ற கருத்தில் எதிர்ப்புக் கிளம்பி யிருக்கிறது. இவ்விஷயமாக இந்தியா 'வழிகாட்டி' யிருப்பதால்தான் இந்தக் கவலை. அடடா, எத்தனை நல்ல பெயரைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறோம் உலக அரங்கிலே!

அணு குண்டுகளைப் பயன்படுத்துவதில் அல்ல, சோதிப்பதிலேயே பயங்கரமான ஆபத்துக்கள் உள்ளன. ஆக்கரீதியில் பயனுறும்போதுகூட சுத்தமான, மக்கள் குலத்துக்குத் தீங்கு விளைவிக்காத அணு குண்டு என்பது கிடையாது. நாம் தப்பினாலும் நமது எதிர்காலச் சந்ததியினர் தப்ப மாட்டார்கள். கீழேயுள்ள ராஜாஜி சிந்தனையைப் படித்துப் பாருங்கள்.

ராஜாஜி சிந்தனை

### எதிர்காலச் சந்ததியினருக்குத் தீங்கு!

தவிர்க்கப்பட வேண்டிய அணுவெடிச் சோதனைகளால் ஏற்படும் கதிரியக்கம் மிக மிகக் குறைவு என்றே வைத்துக் கொள்வோம். ஆயினும் என்ன? இயற்கையாகக் கிடைக்கும் கதிரியக்கத்துக்கு அதிகமாகச் சிறிதளவே கூடினாலும் அது மக்களின் தேகத்தில் ஆபத்தான விளைவுகளை ஏற்படுத்த முடியும். இதைச் சுலபமாக மறந்து விடுகிறார்கள், அல்லது அலட்சியப்படுத்தி விடுகிறார்கள்.

குறைவோ, அதிகமோ எல்லாக் கதிரியக்கமும் நமது உடலில் எதிர்காலச் சந்ததிகளுக்குப் பாதகமாக முடியக்கூடிய மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. இதில் மனிதன் தாங்கிக் கொள்ளக்கூடிய அளவு என்பதாக ஏதும் கிடையாது. இந்த விஞ்ஞான உண்மை மறுதளிக்கப்படாத ஒன்று.

அணுவெடிச் சோதனைகளால் எதிர்காலச் சந்ததியினர் பெரிதும் துயருறுவார்கள். அமெரிக்க தேசிய அகாதமி இந்த விஷயத்தில் கூறியுள்ள தெளிவான தீர்ப்புக்கு எதிர்வாதமே கிடையாது.

— சுயராஜ்யா, மே, 30, 1959

# நேற்றிரவு நீங்கள் கொசுக்கடியால் துன்பப்பட்டீர்களா?

# இன்றே வாங்குவீர் ரிப்லெக்ஸ் க்ரீம் இன்றிரவு விரட்டுவீர் கொசுக்களை!



இன்பமணம் கொண்ட ரிப்லெக்ஸ் க்ரீம் கொசுக்களை விரட்டுவதில் உன்னதமானது. முற்றிலும் தீங்கற்றது; சருமத்துக்குஎரிச்சலூட்டாது. குழந்தையின் மென்மையான சருமத்தின் மீது இதைப் பத்திரமாகத் தடவலாம்.



உங்கள் முகம், கை, கால்களின் திறந்த பகுதிகளின் மீது இரவில் ரிப்லெக்ஸ் தடவுங்கள். கொசுக்களின் தொந்தரவின்றி இரவில் நிம்மதியாகத் தூங்கலாம்.



ரிப்லெக்ஸ் க்ரீம் வெண்மையாக இருப்பதால், உங்கள் சருமத்தில் எளிதில் மறைந்து விடுகிறது. அது துணிகளின் மீது கறை உண்டு பண்ணாது; சருமத்தின் மீது எண்ணெய் படிய விடாது.




நறுமணமுள்ள

## ரிப்லெக்ஸ்

கொசுக்களை விரட்டியடிக்கிறது

டாடா ஃபைஸன் தயாரிப்பு

THE MOST WONDERFUL IDEAS GROW WITH COTTON

# TEXTURES



wool-feel...gay silky...cool lineny...
natural-only as cotton



**Century**-FOR 100% COTTON TEXTILES

THE CENTURY SPG. & MFG. CO. LTD., Bombay 400 025

Adroit-CM-539-P



ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி
காமகோடி
சங்கராசாரியசுவாமிகள்

2

# ஆசார்யாள் காட்டும் அம்பாள்

ஒவ்வொரு காரியத்துக்கும் நேராக, முக்கியமாக ஒரு பலன் இருப்பதோடு, வேறு சில பலன்களும் ஏற்படுகின்றன. இந்தப் பலன்களை உத்தேசிக்காவிட்டாலும்கூட அவைபாட்டுக்கு உண்டாகிவிடுகின்றன. இவற்றை அவாந்தரப் பிரயோஜனம் என்பர். நான் பூஜை செய்வதைப் பார்க்க நீங்கள் வருகிறீர்கள். பூஜையைப் பார்ப்பதே முக்கிய பிரயோஜனம். அதோடுகூட இங்கே வந்த இடத்தில் பூஜையின்போது வாசித்த மேளத்தைக் கேட்டீர்கள்; இங்கே உங்களுக்குத் தெரிந்த சிலரைப் பார்த்தீர்கள். இவையெல்லாம் நீங்கள் உத்தேசிக்காமலே கிடைத்த அவாந்தர பிரயோஜனங்கள். கேநோபநிஷத்தில் அம்பாளைப் பற்றிச் சொல்லியிருப்பதில் இப்படியே ஞானோபதேசம் என்கிற நேர் உத்தேசத்தோடு, வேறு ஒரு பிரயோஜனமும் நமக்குக் கிடைக்கிறது. இது ஆத்மஞானத்துக்கோ, அம்பாள் தத்துவத்துக்கோ சம்பந்தமில்லாதது என்றாலும்கூட, இதிலும் ஒரு முக்கியத்துவம் நவீன காலத்தவர்களுக்கு இருப்பதால் இவ்விஷயமாகச் சொல்கிறேன்.

இக்கால ஆராய்ச்சியாளர்களில் ரொம்பப் பேர், 'புராண காலத்தில்தான் பரமேச்வரன், பார்வதி, விஷ்ணு, பிள்ளையார் முதலிய தேவதா ரூபங்கள் ஏற்பட்டன. புராணங்களுக்கு முற்பட்ட உபநிஷத்துக்களில் இவர்களைப் பற்றிய பேச்சே இல்லை. அரூபமான ஞான தத்துவத்தை மட்டும்தான் உபநிஷத்துக்கள் சொல்கின்றன' என்கிறார்கள். ஆனால் இங்கே கேநோபநிஷத்திலோ 'ஹைமவதியான உமா என்கிற ஸ்திரீ வந்து தோன்றினாள்' என்று பரம ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. 'ஸ்திரீ' என்று சொன்னதால் ஆண்—பெண் கடந்த அரூப தத்துவத்தை மட்டுமே உபநிஷத்துக்கள் தெய்வமாகக் கொண்டிருந்தன என்று சொல்வதை நிராகரித்த மாதிரி ஆகிறது. அவளை 'உமா' என்று சொன்னதோடு நில்லாமல் 'ஹைமவதி' என்றும் சொன்னதால் ஹிமவானின் புத்திரியாக அவள் அவதரித்த விருத்தாந்தமும் உபநிஷத் காலத்திலேயே வழக்கத்திலிருந்ததாக ஏற்படுகிறது. (ஹிமவானின் புத்திரி ஹைமவதி; பர்வதராஜனின் புத்திரி பார்வதி) இன்றைய ஹிந்து மதத்தின் மூர்த்தி வழிபாடு புராண காலத்துக்கு முற்பட்டது; அது உபநிஷத காலத்திலேயே இருந்திருக்கிறது என்பதற்கு அழுத்தமான உட்சான்று ( *Internal Evidence* ) கேநோபநிஷத்தில் கிடைக்கிறது.

உபநிஷத்தில் சொல்லப்பட்ட அம்பாளின் பாதத்தைத் தம் தலையில் வைக்குமாறு, 'சுருதீனாம் மூர்த்தாநோ' சுலோகத்தில் ஆசார்யாள் பிரார்த்திக்கிறார். இங்கே அம்பாளே குரு ஸ்வரூபிணி என்பது வெளியாகிறது. குரு பாதுகை எப்போதும் சிரசில் இருந்து கொண்டிருப்பதாக மந்திர சாஸ்திரங்கள் சொல்கின்றன. இவ்விதத்தில் எப்போதும் குருவின் திருவடி தீக்ஷை கிடைத்துக் கொண்டேயிருக்கிறது.

ஞான குருவாகக் கேநோபநிஷத்தில் தோன்றி, வேத முடிக்கு அணிகலனாகத் தன் பாதங்களை வைத்திருக்கிறாள் அம்பிகை. அந்தப் பாதங்களுக்கு உள்ள மற்ற மகிமைகளையும் இந்தச் சுலோகத்தில் ஆசார்யாள் கூறுகிறார். பெரியவர்கள், மகான்கள், ஆசாரியார்களின் பாதங்களுக்கு ஜலம் வார்த்து உபசாரம் செய்ய வேண்டும். ஷோடசோபசாரம் என்கிற பதினாறு உபசாரங்களில், பாதங்களில் ஜலம் விடுவதை 'பாத்யம்' என்பார்கள். அம்பாளுக்குப் 'பாத்யமாக'ப் பசுபதியின் ஜடையிலிருந்து கங்கா தீர்த்தம் எப்போதும் பெருகிக் கொண்டேயிருக்கிறதாம். சாக்ஷாத் பரப்பிரம்ம சக்தியாக இருக்கப்பட்ட அவளுடைய சரண கமலங்களில், பூத லோகங்களுக்கெல்லாம் பிரபுவானதால் பசுபதி என்று பேர் படைத்த ஈச்வரனும் நமஸ்கரிக்கிறான் என்பது தாத்பரியம். இவருக்கு அந்த பிரபுத்வ சக்தியும் மூலமான பிரம்ம சக்தியிடமிருந்துதானே உண்டாயிற்று? அதனால் அவரும்கூட அகம்பாவமில்லாமல் இங்கே வந்து நமஸ்கரிக்கிறார்.

உத்தம ஸ்திரீயின் பாதங்களில் லாக்ஷாரஸம் என்கிற செவ்வரக்குக் குழம்பைப் பூசியிருப்பார்கள். அம்பாள் பாதத்தை அலங்கரிக்க சிவப்பு ஜோதி ஒன்று இருக்கிறது. 'ஹரி' எனப்படும் சாக்ஷாத் நாராயணனின் சிரஸில் சூடியிருக்கிற சூடாமணியின் பிரகாசமே அம்பாளின் பாதத்துக்கு லாக்ஷாரஸமாக இருக்கிறது என்கிறார் ஆசார்யாள். ஜகத் பரிபாலன கர்த்தாவான மகாவிஷ்ணு இந்தச் சக்தியும் பராசக்தியிடமிருந்தே வந்தது என்பதால் அடக்கத்தோடு அவளுடைய சரண கமலங்களில் நமஸ்கரிக்கிறார்; அப்போது அவருடைய சிரோ பூஷணம் அம்பாளுக்குப் பாத பூஷணமாகிறது.

தேவர்கள், ஸ்ரீ மகாவிஷ்ணு, பரமேச்வரன் எல்லோரும் அகம்பாவமே இல்லாமல் ஆராதனை செய்த அம்பாள் நம் அகம்பாவத்தைப் போக்கி ஞான அநுக்கிரகம் செய்ய வேண்டும். அதற்கு வழியாக, அவளுடைய சரணாரவிந்தங்களை நம் ஆசார்யாள் போல நாமும் தியானம் செய்ய வேண்டும்.

நார்வாவின் கம்பீரமான உருவத்தையும் அவனுடைய நடையில் பிரதிபலிக்கும் ஆணவத்தையும் கண்டு தன்னுள் பிரமித்துப் போன புட்லி, தான் நின்ற இடத்திலிருந்து விரைந்து நடக்கலானாள். மலைச் சரிவில், ஒற்றையடிப் பாதையில் நார்வா நடந்து போய்க் கொண்டிருக்கிறான். புட்லி பள்ளத் தாக்கில், ஒரு சிறு குட்டையின் கரையிலிருந்து புறப்பட்டிருக்கிறாள். பள்ளத் தாக்கின் சம தரையில் அவள் குறுக்கே விரைந்தால், அவன் மலைச் சரிவிலிருந்து இறங்கி அத்தி மரத்தை அடையும்போது அவனைச் சந்திக்கலாம். அத்தி மரம் அவர்களுடைய சந்திப்புக்குச் சாட்சியாக நேற்று, அதற்கு முந்திய தினம், சென்ற வாரம் இருந்தது போல் இன்றும் இருக்கும். அவன் அவளைத் தன் இரு முரட்டுக் கரங்களால் வாரி அணைத்துக் கொள்ள, அவளுக்கு மூச்சுத் திணறும். காலையின் இளங் குளிர் காற்றில், அவனுடைய அணைப்பு எவ்வளவு ஆனந்தமாக இருக்கும்!

நடந்து கொண்டிருக்கையிலேயே, திடீரென்று நந்தினியின் நினைவு அவளுள் எழுந்தது. நினைப்பு தோன்றிய கணமே உதடுகள் சிரித்தன. நந்தினி ஒரு பைத்தியம். இல்லாத போனால் நார்வாவைப் பற்றி அவள் ஏங்குவாளா? புட்லி—நார்வா என்று டால்கானியா கிராமமே இணைத்துப் பேசிக் கொண்டிருக்கிறது. இன்னும் இரண்டே மாதங்களில் புட்லி, நார்வாவின் மனைவி என்று உலகம் பறைசாற்றப் போகிறது. நிலைமை இப்படி இருக்கையில் நந்தினி, நார்வாவைப் பற்றிக் கனவு காண்கிறாள்!

அவள் ஒரு பைத்தியம்!

நந்தினியைப் பற்றி நினைக்க நினைக்க, புட்லிக்குத் தன்னுடைய பெருமையே முகத்தில் அடிப்பது போலப் பெரிதாகத் தோன்றியது. நந்தினி ஒரு சாதாரணத் தொழிலாளியின் பெண். ஏன், நந்தினியே தினக் கூலி வாங்குகிறவள். அழகுள்ளவள்தான். ஆனால் புட்லி? நந்தினியைவிட அழகி. கவர்ச்சி உள்ளவள். இதை நார்வாவே அடிக்கடி சொல்லியிருக்கிறான். அதுவும் புரிந்து கொண்டு சொல்லியிருக்கிறான். அவன் நந்தினியுடன் பழகியவன்தான். ஆனால் புட்லியைத்தான் காதலிக்கிறான். எல்லாவற்றையும்விட புட்லி ஒரு பணக்காரனின்



பெண். காட்டிலாகா கண்டிராக்டரின்பெண். நாளைக்கு, கல்யாணமான உடனேயே நார்வாவும் இப்போ இருக்கிற தொழிலை உதறி எறிந்துவிட்டு அவளுடைய தந்தைக்கு உதவியாக வந்துவிடுவான்.

அப்புறம்? அப்புறம்? புட்லி—நார்வா தாம்பத்தியம் வசந்த காலத்துப் பூக்கள் போல் ஆனந்தமயமாக இருக்கும். நார்வாவைப் போல் கம்பீரமும் பலமும் உள்ள பிள்ளை ஒன்றை அவள் பெற்றுக் கொடுப்பாள். அக்குழந்தைக்குப் பூர்வா என்று பெயரிடுவாள்.

இதையெல்லாம் பார்த்துப் பார்த்துச் சகிக்க முடியாமற் போய், ஒரு நாள் நந்தினி மலையிலிருந்து பள்ளத்தாக்கில் குதித்துப் பிராணனை விடுவாள். பாவம்! பைத்தியக்காரி.

நார்வா என்னதான் மிடுக்குடன் நடந்தாலும், அவன் மனத்தை வேதனை பிடுங்கித் தின்று கொண்டிருந்தது. ஒரு வாரமாகவே நந்தினி சரியாக இல்லை. பட்டுப் போன்ற அவள் உடல் வாடிக் கொண்டு வருகிறது. கபடமில்லாமல் அவள் பேசுவதோ சிரிப்பதோ இப்போது ஒரு சரித்திரமாகிவிட்டது. அவள் அவனிடம் தன்னுடைய ஏமாற்றத்தையோ துக்கத்தையோ வெளிப்படுத்தவேயில்லை. மூன்று வருடங்களாக விடாமல் அவனைக் காதலித்து வந்த ஓர் ஏழைப் பெண்ணை அவன் உதறி எறிந்தது மகத்தான தவறுதான். இதற்குக் காரணம் நந்தினியின் விதி என்று சொல்லுவதா? அல்லது அவனுடைய அதிர்ஷ்டம் என்பதா? கிராமத்தாருக்குத் தேவையான வெல்லம், தவிடு, ஆட்டா, வெங்காயம் போன்ற பலசரக்குகளை அல்

# மனம் விகாரமில்லை

பி.வி.ஆர்.



மோராவிலிருந்து மாதா மாதம் எடுத்து வந்து வீட்டு வாசலில் இருந்த கடையில் கொட்டி, சேர் சேராக விற்றுப் பிழைக்கும்

பிழைப்பு அவனுக்கு அலுத்துவிட்டது. மாதம் முப்பது ரூபாய்கூட லாபம் இல்லை. இந்தக் கூத்தில் பலர் கடனுக்கு வாங்கிக் கொண்டு போய், பணம் கொடுக்க முடியாமல் திண்டாடுகிறார்கள். அவனிடம் கெஞ்சுகிறார்கள். ஆட்டையோ மாட்டையோ அடகு வைக்கிறேன் என்கிறார்கள்.

இந்தப் பலசரக்குக் கடை அவனுக்கு அலுத்துவிட்டது. கண்டிராக்டர் பெண் புட்லிதான் அவனுடைய மனத்தின் அலுப்புக்குக் காரணம். அல்மோராவில் பெரிய வீடு இருக்கிறது அவருக்கு. கண்ட்ராக்ட் வேலை காரணமாகக் குடும்பத்துடன் டால்காலியாவுக்கு மூன்று மாதங்களுக்குமுன் வந்திருக்கிறார், அவளுடைய தந்தை. அவர்கள் வந்த மறுநாளே புட்லி அவனுடைய கடைக்கு வந்தாள். வந்தவள் அவனைக் கண்டதும் பேச்சு அற்று நின்றுவிட்டாள். அவள் அவனைப் பார்த்த பார்வை! செக்கச் செவேலென்று இருக்கும் அவளுடைய முகம் எவ்வளவு அழகாக மேலும் சிவந்தது! அவளுடைய உடலில் அவன் கவனித்த ஒரு நடுக்கம், கண்களில் பிரதிபலித்த உணர்ச்சிகள், அப்பப்பா! என்ன அனுபவம்!

இந்தப் புட்லி அதன் பிறகு அவனை விடவேயில்லை. அவன் இல்லாவிட்டால் தான் இல்லை, தன் உயிரே இல்லை என்ற பிடிவாதம். அவளுடைய பணக்கார அப்பா சம்மதிக்காவிட்டால் அவரையே உதறி எறிந்து, நார்வா



எஜமானர்: உன்னை ஒரு அவசர காரியமா பெரம்பூர் அனுப்பணும்னு தேடினேன், காணுமே என்ன காரணம்?

வேலைக்காரன்: என் அதிர்ஷ்டம்தான் காரணம்.

வுடன் அவனுடைய கடையில் ஜன்மம் முழுதும் உட்காரத் தயாராம்!

ஒரு நாள் புட்லியின் தகப்பனார், காட்டிலாகா கண்ட்ராக்டர் அவனுடைய கடைக்கு வந்தார். நார்வா மரியாதையுடன் கைகூப்பி வரவேற்று எழுந்து நின்றான். கண்டதுமே அவருக்கு அவனைப் பிடித்துவிட்டது. தாம் அல்மோராவில் இருந்தால், இவன் இங்கேயுள்ள தொழிலாளர்களின் தினசரி வேலைகளைக் கவனிக்கலாம் என்று அவர் கணக்குப் போட்டார். ஒரு கடையை நடத்தி வரும் நார்வா, தொழிலாளிகளிடம் வேலை வாங்கவும் வாங்குவான். பணத்துக்குக் கணக்கும் எழுதுவான். நார்வா ஏழை என்றாலும் ஒரு தேஜஸ் அவனிடம் இருக்கிறது. இந்தத் தேஜஸில்தான், அவருடைய பெண் தன்னைப் பறி கொடுத்திருக்கிறாள். தன் தாயிடம் முறையிட்டிருக்கிறாள்.

ஓரிரு வார்த்தைகள் நார்வாவுடன் பேசிவிட்டுச் சென்றார் புட்லியின் தந்தை. அவனுடைய மரியாதை, கபடமற்ற பேச்சு, பேச்சில் நிலவிய நிதானம் எல்லாம் அவரை வெகுவாகக் கவர்ந்தன.

அவனைத் தமக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது என்று அவர் சொன்ன போது நார்வா ஆச்சரியம் அடைந்தான். புட்லி காடெல்லாம் ஓடி மகிழ்ந்தாள்.

நந்தினி, தன் காதலுக்குச் சாவு மணி அடித்தாகிவிட்டது என்று தன்னுள் ஓலமிட்டு அந்த ஓலத்தின் அபஸ்வரம் நார்வாவின் காதில் விழாவண்ணம், இயந்திரமாக இயங்கி வந்தாள்.

ஆனால் அவளுடைய மனத்தின் வேதனை ஒலியை நார்வா கேட்காமலில்லை. இந்தப் புட்லி மூன்று மாதங்களுக்கு முன் வந்து, அவனுடைய வாழ்க்கைத் தடாகத்தில் ஒரு கல்லைப் போட்டு அலைகளை எழுப்பாமலிருந்திருந்தால், கண்டிப்பாக நந்தினியின் காதல் வெற்றி அடைந்திருக்கும். ஆனால் புட்லி எங்கிருந்தோ வந்து, நந்தினிக்கு யமனாக வாய்த்துவிட்டாள்.

நார்வா ஒற்றையடிப் பாதையில், சிந்தனையில் தன்னைப் பறிகொடுத்துக்கொண்டே நடந்தான். இடது பக்கத்தில் கம்பீரமாக ஓங்கி நிற்கும் மலைத் தொடர்ச்சியோ, வலது பக்கத்தில் திடீரென்று இறங்கிச் சரிந்து பரந்து நிற்கும் பச்சைப் பள்ளத்தாக்கோ அவன் கண்ணுக்குத் தெரியவில்லை. அவன் கண் முன், நந்தினி தலைவிரி கோலமாக அழுது கொண்டே, புலம்பிக் கொண்டே ஓடுகிறாள். அவளைத் தடுத்து நிறுத்தி ஆறுதல் சொல்ல முடியாத ஒரு கோழையாக நார்வா நடக்கிறான். பின்னால் கைகொட்டிச் சிரித்துக் கொண்டே புட்லி வெள்ளிக் காப்பும் தங்க வளையல்களும் சத்தமிடத் தொடர்கிறாள்.

சிந்தனையில் தன்னையே மறந்தவன் திடீரென ஏதோ ஓர் அரவம் கேட்கவே, சட்டென்று நின்றான். ஓர் ஆபத்து அவனைத் தாக்கப் போகிறது என்ற உள்ளுணர்வு எழுந்தது. அந்த உணர்வோடு அவன் திரும்பிப் பார்ப்பதற்குள் —

பதினெட்டுப் பேர்களைத் தின்று விழுங்கிய சௌகார் புலி அவன் மீது பாய்ந்துவிட்டது. அவன் மல்லாந்து விழுந்தான்.

புட்லி அத்தி மரத்தை அடைவதற்கும், அந்தப் புலி இரு மலைகளுக்கு நடுவே இருந்த இடைவெளிக் குன்றுகளிலிருந்து ஒற்றையடிப் பாதையில் இறங்குவதற்கும் சரியாக இருந்தது. ஒரே விநாடியில், நார்வா எத்தகைய ஆபத்தில் சிக்கியிருக்கிறான் என்று புரிந்து விட்டது. அவள் இருந்த இடத்திலிருந்து என்ன கத்தினாலும், காற்றின் எதிர் வீச்சில் அவன் காதில் விழாது. மேலும், நார்வா ஓடித் தப்பவும் முடியாது. வலது புறம் பள்ளம். குதிக்க முடியாது. இடது புறம் மலை. முன்னால் ஓடலாம். ஆனால் புலியின் பாய்ச்சலுக்கு நார்வாவின் காலோட்டம் எப்படி ஈடு கொடுக்க முடியும்?

உடலெல்லாம் நடுங்க புட்லி அத்தி மரத்தடியில் நின்றாள். அவளுக்கு என்ன செய்வது, நார்வாவை எப்படிக் காப்பாற்றுவது என்று புரியவில்லை. தெய்வத்தைத் தவிர வேறு யாராலும், நார்வாவை அவன் இருந்த நிலையிலிருந்து காப்பாற்ற முடியாது என்று அவள் நினைத்தாள்.

புலி அவன் மேல் பாய்ந்தபோது அவள் பயத்தில் கண்களை மூடிக் கொண்டாள். அவள் மீண்டும் கண் திறந்த போது, கண்ட காட்சியில் வீறிட்டு அலறினாள். அந்த அலறலின் எதிரொலியில் பள்ளத்தாக்கே நடுங்கியது.

புலி நார்வாவின் மார்பின் மேல் முன்னங் கால்களைப் பதித்து, வாயை அவனுடைய முகத்துக்கு நேராகக் கொண்டு போயிற்று.

புட்லி பள்ளத்தாக்கில் ஓடினாள். தலைகால் புரியாமல் ஓடினாள். பைத்தியம் பிடித்தவள் போல் ஓடினாள்.

அப்போது அவளுடைய மனத்தில் எந்த விதமான சிந்தனையும் எழவில்லை. அல்மோரா வீடு, அப்பா, அம்மா, நந்தினி யாரும் அவளுடைய நினைவில் தோன்றவில்லை.

ஏன், அவள் நார்வாவைக்கூட மறந்து விட்டாள்.

புட்லிக்குத் தோன்றியதெல்லாம், தன் உயிர் மேலுள்ள ஆசைதான். அந்தப் பேராசை அவளை, அவளே உணர்ந்தறியாத

# FOUR AND A HALF MILLION PEOPLE READ THE WEEKLY...

*...NATURALLY!*




**It is Asia's finest illustrated magazine.**

**It gives you:**

* Current Topics. The Weekly helps you to keep pace with tomorrow: lively comment on topical subjects—political, social, economic, cultural.

* Communities. The Weekly helps you know your neighbours—their origins, customs, rituals, their problems and their achievements.

* General Features. The latest in books, films, music, theatre, painting, short-stories, humour and satire, a fun-filled page for children; jokes—new and stale; your Fortune from the Stars, and loads of other interesting material.

All written by experts, yet lively and readable.

All illustrated by the finest photographers, artists and cartoonists of the country.

**Make the Illustrated YOUR Weekly Habit**



**The Illustrated Weekly of India**

**அரசை வென்ற மரங்கள்!**



ஜப்பானில் நிக்கோ நெடுஞ்சாலை மிகவும் அகலமானது. ஆனால் ஓரிடத்தில் மட்டும் குறுகி விடுகிறது. இதனால் போக்குவரத்துக்கு மிகவும் இடைஞ்சல். பாதையை அகலப்படுத்தச் சில மரங்களை வெட்ட வேண்டியிருந்தது.

மரங்களின் வயது ஐந்நூறு ஆண்டுகள்! விட்டம் இரண்டு மீட்டர்! உயரம் நாற்பது மீட்டர்! மரங்கள் ஒரு கோயிலுக்குச் சொந்தமானவை.

அரசை எதிர்த்துக் கோயில் தர்மகர்த்தாக்கள் வழக்காடினர். 'இத்தகைய அற்புத மரங்களைச் சுலபமாய் வெட்டிவிடலாம். மீண்டும் உருவாக்க முடியுமா? இயற்கை தந்த அரிய பரிசு; அதைக் காக்க வேண்டாமா?' என்று வாதாடினர்.

ஒன்பதாண்டுகள் வழக்கு நடந்தது. தீர்ப்பு: மரங்களை வெட்டக் கூடாது!

ஜப்பானிய அரசு தற்போது அங்கே ஒரு பாதாள சுரங்கப் பாதை அமைக்கத் திட்டம் வகுத்துள்ளது!

ஆதாரம்: ''ஜப்பான்''

---

சக்தியின் சீற்றத்தோடு ஓட வைத்துக் கொண்டிருந்தது.

நார்வா தன் நிலையை ஒரு கணத்தில் கணக்கிட்டான். வரவு, செலவு இரண்டையுமே ஆராய்ந்தான். அவனுடைய இரண்டு கால்கள் விரிந்து கிடக்கின்றன. புலி அவனை அழுத்திக் கொண்டிருக்கிறது. கிராமத்தில் அவனுக்கு யானை பலம் இருக்கிறது என்கிறார்கள். 'அந்தப் பலத்தை அவன் இப்போது ஒரு மூலதனமாக, ஓர் ஆயுதமாக உபயோகிக்க வேண்டும்! எப்படி?

இடது கண்ணுக்கு மேலே புருவத்தின் அருகேயிருந்து ரத்தம் பீறிட்டுக் கொண்டிருக்கிறது. வலது கன்னத்தில், காதிலிருந்து தாடைவரை புலியின் நகம் பள்ளம் தோண்ட ரத்தம் பெருகிக் கழுத்தில் வழிந்து கொண்டிருக்கிறது. தோள்பட்டையில் புலியின் பற்கள் சதையைக் கவ்வியிருக்கின்றன. கழுத்தில் வேறு புலியின் நகம் கீறியிருக்கிறது. வலி வதைக்கிறது.

ஒரு விநாடிகூட இனி தாமதிக்கக் கூடாது. அப்படித் தாமதித்தால், புலி கழுத்தில் வாயை வைத்துச் சுவாசக் குழாயைத் துண்டித்துவிடும் என்று உணர்ந்தான் நார்வா.

அவனுடைய வலது கை மலையின் அடிவாரத்தில் முளைத்திருந்த சிறு மரத்தின் அடித் தண்டைக் கவ்விப் பிடித்திருந்தது. இரண்டு கால்களும் சுதந்திரமாக, புலியின் இரு பக்கங்களிலும் விரிந்து கிடந்தன. இடது கையின் மேல் புலியின் வலது முன்னங் கால்கள் லேசாக உராய்ந்து கொண்டிருந்தன.

நார்வா மரத்தின் அடித் தண்டைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். புலி உணராவண்ணம் கால்களை விரைவாக நகர்த்தி நன்றாகச் சேர்க்க ஆரம்பித்தான். இடது கையை விடுவிக்க முடியவில்லை. கொஞ்சம் நகர்த்தாலும் முகத்தில் மூச்சை வாரி இறைத்துக் கொண்டிருக்கும் புலி ஒரே அறையால் தீர்த்துவிடும் என்று தோன்றியது.

மரத்தின் தண்டு, அவனுடைய பலத்தில் இணைந்தது. இரு கால்களின் மௌனச் சேர்க்கையில், அவனுடைய உள்ளத்தில் திடீரென்று ஒரு தெம்பும் அசாதாரண தைரியமும் பிறந்தன.

அடுத்த கணம் இரு கால்களும் புலியின் வயிற்றின் நடுவே அழுந்தி, புலி தன்னைத் தானே சமாளித்துக் கொள்ளுமுன், தூக்கி, உதறி எறிந்தன. புலி, செங்குத்தான பகம் பள்ளத்தாக்கில் விழுந்தது.

உடம்பின் சக்தியையெல்லாம் திரட்டிக் கொண்டு நார்வா ரத்தக் களறியான முகத்தையும் லட்சியம் செய்யாமல் கிராமத்தை நோக்கி விரைந்து நடந்தான். ஒரு திருப்பத்தில் வந்த போது பள்ளத் தாக்கைப் பார்த்தான். ரத்தம் கண்ணை மறைத்தாலும், புலி ஓடுவது தெரிந்தது.

நார்வா பிழைக்கமாட்டான் என்று கிராமத்தார்கள் சொல்லி விட்டார்கள். ரத்தத்தை யெல்லாம் அவர்கள் கழுவிவிட்ட போது, தண்ணீருக்கு அவன் சமிக்ஞை செய்தான். நந்தினி ஓடோடிச் சென்று ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வந்தாள். கழுத்தின் ஓட்டை வழியாக, குடித்த தண்ணீர் பெருகி வெளி வந்தது.

''நான் என் பிறந்த மண்ணிலேயே சாக விடுங்கள்'' என்றுமுணுமுணுத்தான் நார்வா.

ஆனால் கண்ட்ராக்டர் விடவில்லை. தொழிலாளர்களுக்காக வைத்திருந்த முதல் சிகித்சைப் பெட்டியுடன் வந்த அவர் இருக்கிற மருந்துக் களிம்புகளையெல்லாம் காயங்களின் மீது அடைத்து அழுத்தினார்.

பிரக்ஞையற்ற நிலையில் அவனை ஏதோ ஒரு சின்னஞ் சிறு ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் சென்றார்கள்.

மூன்று மாதங்களுக்குப் பிறகு அவன் மீண்டும் கடையில் உட்கார்ந்தபோது, சிறுவர்களும் சிறுமிகளும் அவனுடைய முகத்தைப் பார்த்துப் பயந்து ஓடினார்கள். கிராமத்து மனிதர்கள் அவனுடைய முகம் அளித்த அருவருப்பைச் சகிக்க முடியாமல் வேறு பக்கம் பார்த்தார்கள். அவனுடைய கண்ணை எந்தக் கண்ணுமே சந்திக்கவில்லை.

இடது விழி போய் விட்டது. புருவத்தில் ஒரு நீளமான பள்ளம். வலது கன்னம் முழுதுமே சின்னாபின்னமாகி, உருத் தெரியாமல் போய்த் தாடையை இடதுபுறமாகத் தள்ளியிருந்தது. வலது காதின் பக்க வாட்டில் புலியின் நகம் எழுப்பிய முத்திரைகள். மொட்டை அடித்த மண்டையில் சிவப்புச் சிவப்பாகக் காயங்கள் அசிங்கமாகத் தோன்றின.

உடல் பழைய சக்தியைப் பூரணமாகப் பெறவில்லை. நார்வா முன்னைப் போல் இயங்க ஆரம்பித்தான். வயதில் பெரியவர்கள், அனுபவத்தில் முதிர்ந்தவர்கள் அவனைக் கண்டு வியந்தார்கள்; பரிதாபப் பட்டார்கள். ஆறுதல் சொன்னார்கள்.

நந்தினி கடந்த மூன்று மாதங்களாகத் தினந்தோறும் ஆஸ்பத்திரிக்குச் சென்று,

பொழுது சாயும் வரையில் அவனுடனேயே இருந்தாள். ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேறிய அன்று, அவளே அவனை அழைத்து வந்தாள்.

ஆஸ்பத்திரியில் சேர்ந்த புதிதில், இரண்டு மூன்று தடவை தகப்பனுருடன் அவனைப் பார்க்கச் சென்ற புட்லி, அவன் கடைக்குத் திரும்பியபின் பார்க்க வரவேயில்லை. அவள் அல்மோராவுக்குத் திரும்பிப் போயிருக்க வேண்டும் என்று நார்வா நினைத்தான். அவள் இன்னும் இதே காடுகளில்தான், இதே டால் காளியாவில்தான் இருக்கிறாள் என்ற உண்மையை நந்தினியும் சொல்லவில்லை.

ஒரு நாள் நார்வா நந்தினியிடம் சொன்னான் :

''எனக்குப் புட்லியைப் பார்க்க வேண்டும்.''

''சந்தோஷம்.''

''நீ போய்ச் சொல்லுகிறாயா?''

''சொல்லுகிறேன் அவள் வராவிட்டால் மனமுடைந்து போகமாட்டாயே?''

''ஏன்?''

''அவள் வரமாட்டாள் ''

''புட்லி என் மீது உயிரையே வைத்திருக்கிறாள். கண்டிப்பாக வருவாள்.''

''உன் மீது அவள் உயிரை வைக்கவில்லை. உன் அழகின் மீது, உன்னுடைய மூக்கின் மீது வீரத்தின் மீது, கண்களின் சிரிப்பின் மீது அவள் உயிரை வைத்தாள்.... இப்போது அந்த உயிர் போய்விட்டது, நார்வா !''

''என்ன உளறுகிறாய்?''

''கண்டிராக்டர் உன்னை இன்னும் கல்யாணத்துக்கு அழைக்கவில்லை போல் இருக்கிறது. ஒரு வேளை, புட்லியே அழைப்பு அனுப்ப வேண்டாம் என்று சொல்லியிருப்பாள்......''

'' நந்தினி !''

'' என்ன நார்வா ?''

''நீ சொல்வதெல்லாம் நிஜமா ?''

''சத்தியம்!''

''புட்லி எப்படி இன்னொருவனைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்தாள்? அவள் அப்பா மனம் மாறி விட்டாரா ?''

''அவர் மனசைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது.... ஆனால் அவள் மனசைப் பற்றி நன்றாகத் தெரியும்.... அவள் கடைசியாக உன்னைப் பார்க்க வந்தபோது நீ தூங்கிக் கொண்டிருந்தாய்.... உன் முகத்தை அவள் பார்த்த போது, நான் அவளுடைய முகத்தைப் பார்த்தேன். அப்போது அவள் முகத்தில் நான் என்ன பார்த்தேன், தெரியுமா, நார்வா ?''

''சொல்லு.''

''அருவருப்பு....இரண்டு வருஷங்கள் முன்னாலே மதம் பிடிச்ச யானை நம்ப கிராமத்து எருமை ஒன்றை மிதிச்சுக் கிழித்துக் கொன்றதே ஞாபகமிருக்கா... எருமையின் குடல் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்து அலங்கோலமாகக் கிடந்தது. பார்த்தவர்களில் பாதிப் பேர்கள் கண்களை மூடிக் கொண்டார்கள்.... ஒருசிலருக்கு வாந்திகூட வந்தது... உன்னைப் பார்த்த போது புட்லி வாந்தி எடுக்கவில்லை... கண்ணை மூடிக் கொண்டாள்.''

பர்தா

முறையானாலும்...!



பர்தா முறை கடைப்பிடிக்கும் சௌதி அரேபியா சர்வ கலாசாலை மாணவிகள் நூலகத்தை எப்படிப் பயன்படுத்துகிறார்கள்? வியாழக்கிழமை மாலைகளில் மட்டும் அவர்கள் போக அனுமதிக்கப்படுகிறார்கள். அப்போது வேறு மாணவர்களோ அல்லது நூலகர்களோகூட இருக்க மாட்டார்கள் அங்கு. இந்தச் சர்வ கலாசாலை மாணவிகள் ஆண் ஆசிரியர்களின் சொற்பொழிவுகளை டெலிவிஷன் மூலம் கேட்டறிந்துகொள்கிறார்கள்!

பர்தா முறையானாலும் படிப்பில் பார்க்கிறார்கள் ஒரு கை!

-பி.எஸ்.எம்.

''ஏதானும் சொன்னாளா, போகிறதுக்கு முன்னால் ?''

''அவள் சொன்னதைச் சொன்னால் உன்னால் தாங்கிக் கொள்ள முடியுமா, நார்வா ?''

''சொல்லு, நந்தினி.... நீ என் விகாரத்தைத் தாங்கிக் கொள்ளும்போது, நான் இனி எதையும் தாங்கிக் கொள்ளுவேன்.... சொல்லு!''

'' 'பாவம் நார்வா.... முகம் எப்படிக் கோரமாகி விட்டது.. அழகு எப்படிக் குலைந்து போய் விட்டது....' என்னைக் கல்யாணம் செய்து கொள்ள ரொம்ப ஆசைப்பட்டுக் கொண்டிருந்தான்.... பாவம்' என்றாள். உன் முகத்தைக் கண்டு அவள் ரொம்பப் பரிதாபப் பட்டுக் கொண்டே போனாள்.... கல்யாணம் ஆவதற்கு முன்னாலே இப்படி நேர்ந்ததே என்று அவளுக்கு ரொம்பத் திருப்தி......!''

நார்வா கண்களை மூடிக் கொண்டான். அவனுடைய முகத்தின் விகாரம் அவனைச் சம்மட்டியால் அடிப்பது போல் இருந்தது. அதைவிட புட்லி அடித்த அடி வலித்தது.

அவன் ஈனமான குரலில் கேட்டான்.

''நந்தினி, புட்லி என்னைவிட்டு விலகியது போல, நீ ஏன் உதறிக் கொண்டு போகவில்லை ? நீயும் வேறு ஒருவனை.....''

நந்தினி சிரித்தாள்.

''நார்வா, நான் உன் முகத்தையோ, உன் கண்களையோ காதலித்திருந்தால் நானும் என்றோ உன்னை விட்டுப் போயிருந்திருப்பேன். நான் உன்னைத்தானே காதலித்தேன். புலி உன் உடம்பைத்தானே விகாரமாக்கியிருக்கிறது !''

''நந்தினி.... நந்தினி !''

நார்வாவின் தொண்டை அடைத்துக் கொண்டது. கண்ணீர் பொங்கி எழுந்தது.

''அட என்ன நீ, இவர்னு அழறே..... புலியை எதிர்த்து ஜயிச்சவன் அழறதா !''

நார்வா வாய் பேசாமல் நந்தினியைத் தன்பால் இழுத்துக் கொண்டான்.

**பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள்:**

# தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.

## போர்ஹென்ஸ் பற்பசையைத் தவறாமல் உபயோகிப்பவர்கள் தாங்களாகவே கூறுகிறார்கள்:

''இப்பொழுது எனக்கு வயது இருபது. நான் பனிரெண்டு வயது முதலே போர்ஹென்ஸ் உபயோகித்து வருகிறேன். முதன் முதலாக போர்ஹென்ஸ் உபயோகிக்கத் தொடங்கியபோது, என் ஈறுகளுக்கு சிறிது தொல்லை ஏற்பட்டது. ஆனால் இப்போது அது சரியாகிவிட்டது; தொல்லை ஏதும் இல்லை... முதலில் நான் இரவில் பற்களைத் துலக்குவதில்லை. இரவில் 10 மணிவரை படிப்பது வழக்கம். அப்போது தினமும் உங்கள் விளம்பரம் 'ஒரு புதிய பழக்கத்தை நினைவுறுத்தும்''

(கையொப்பம்)
எஸ். மித்தல், பி.ஏ. (எலெக்ட்ரிகல்),
பாட்டியாலா.

''நான் புகை பிடிப்பவன் அல்ல. எனினும், ஓர் ஆண்டுக்கு முன்பு, என் பற்கள் மஞ்சளாக இருப்பதைக் கவனித்தேன். முப்பது ஆண்டுகளாக போர்ஹென்ஸ் உபயோகித்து வரும் என் தந்தை, நான் உபயோகித்து வந்த பற்பசையை விட்டு விட்டு, போர்ஹென்ஸுக்கு மாற்றிக் கொள்ளச் சொன்னார். அப்படியே செய்தேன்; என்ன ஆச்சரியம்! இப்பொழுது என் பற்கள் வெண்மையாகப் பளிச்சிடுகின்றன. அதற்குக் காரணம் உங்கள் போர்ஹென்ஸ் பற்பசைதான். நீங்கள் கூறும் சிறப்புகள் அனைத்தும் அதில் உள்ளன. **ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை** அது என்பது மட்டுமே போதும் அதன் சிறப்புக்கு!

(கையொப்பம்) எஸ்.எஸ். சட்டர்ஜி,
கோயம்புத்தூர்.




(மேற்கண்ட சான்றிதழ்களின் புகைப்பட நகலை ஜெப்ரி மேனர்ஸ் & கம்பெனி லிமிடெட்டின் எந்த அலுவலகத்திலும் காணலாம்.)

சீரான பற்பராமரிப்புக்கு இரவிலும் காலையிலும் போர்ஹென்ஸ் பற்பசை மற்றும் போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத் பிரஷ் உபயோகியுங்கள்... உங்கள் பல் வைத்தியரையும் தவறாமல் கண்டு வாருங்கள்.

**இலவசம்!** ''உங்கள் பற்களையும ஈறுகளையும் பராமரிக்கும் முறை'' என்னும் விவரமான வண்ணப் புத்தகம்.

இப் புத்தகம்* பெற (தபால் செலவுக்காக) 25 பைசா தபால் தலையுடன் இக் கூப்பனை ''மேனர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய்-1'' என்னும் முகவரிக்கு அனுப்புக.

பெயர் ____________________ வயது ______ K-6

முகவரி ____________________________

*எந்த மொழியில் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, பஞ்சாபி, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ் தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

**போர்ஹென்ஸ் – பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை**

129 F-182 TAM

# சிவகாமியின் சபதம்

நாற்பத்தேழாம் அத்தியாயம்

## மழையும் மின்னலும்

சிவகாமிக்குச் சுயஉணர்வு வந்த போது தான் பாறையில் சாய்ந்து கொண்டு தரையில் உட்கார்ந்திருப் பதையும், சக்கரவர்த்தி தனக்கு அரு கில் உட்கார்ந்து ஆசுவாசப்படுத்து வதையும் கண்டாள். பயபக்தியுடன் சட்டென்று எழுந்திருக்க அவள் முயன்ற போது மகேந்திரர் அவ ளுடைய கரத்தைப் பிடித்து உட்கார வைத்து ''வேண் டாம்!'' என்று கூறினார்.

காதில் விழுந்த விஷயம் னுடைய சித்தப்பிர மகேந்திரர் பல்லவரைச் சக்கரவர்த்தி, ''குழந் டைய அன்பு எத் டாய். அவனுக்கு உன் உணர் நிறைந்த வேண்டிய

சற்று முன்னால் தன் உண்மைதானா அல்லது தன் மையா என்று கேட்பவள் போல் சிவகாமி இரங்கி நோக்கினாள். தாய்! மாமல்லனிடம் உன்னு தகையது என்பதைக் காட்டிவிட் உன்னால் அபாயம் நேர்ந்தது என்றதும் வையே இழந்துவிட்டாய். இத்தகைய அன்பு உன் இருதயத்தை நான் மேலும் புண்படுத்த வனாயிருக்கிறேன்'' என்றார்.

''ஐயோ! இன்னும் என்ன ?''என்று சிவ காமி விம்மினாள்.

''முக்கியமான விஷயத்தை இன்னும் உனக்கு நான் சொல்லவில்லை, சிவகாமி! உன்னிடம் ஒரு வாக்குறுதி நான் கேட்கப் போகிறேன், மாமல்லனுடைய க்ஷேமத்துக்காகக் கேட்கப் போகிறேன். நீ மறுக்காமல் தரவேண்டும்'' என்றார் மகேந்திரர்.

சிவகாமியின் குழம்பிய உள்ளத்தின் அடிவாரத்தில் ஒரு சிறிது தெளிவு ஏற்படத் தொடங்கியது. சக்கரவர்த்தியின் பேரில் அவளுக்கு ஏற்கெனவே இருந்த சந்தேகங்கள் மீண்டும் தோன்றின. 'இவர் நம்மை ஏமாற்றி ஏதோ சூழ்ச்சியில் அகப்படுத்தப் பார்க்கிறார் : ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்' என்று எண்ணினாள்.

தன்னால் மாமல்லருக்கு அபாயம் நேர்ந்ததாகச் சற்று முன் சக்கரவர்த்தி கூறியதில்கூட அவநம்பிக்கை ஏற்பட் டது. தன்னைத் தனிமைப்படுத்தி வைத்துக்கொண்டு எதற்காக

அமரர் கல்கி



இப்படி யெல்லாம் இவர் பேசுகிறார்? இவருடைய நோக்கங்கள் என்ன? தலைகுனிந்த வண்ணம், ''பல்லவேந்திரா! தாங்கள் சொல்வது ஒன்றும் என் மனத்தில் பதியவில்லை. மாமல்லருக்கு என்றால் அபாயம் நேர்ந்தது என்று சொன்னீர்களே? அது எப்படி?'' என்று கேட்டாள்.

''குழந்தாய்! உன் மனத்தை அதிகமாக வருத்தப்படுத்த வேண்டாம் என்று அதை நான் சொல்லவில்லை. நீயே கேட்கிறபடியால் சொல்கிறேன். காஞ்சியில் உன் அரங்கேற்றம் நடந்த இரண்டு நாளைக் கெல்லாம் உங்கள் அரண்ய வீட்டுக்கு நான் வந்தேனல்லவா? அப்போது உன் தந்தையிடம் சில விஷயங்கள் சொன்னேன். நீயும் கேட்டுக் கொண்டிருந்தாய். உன்னுடைய கலை தெய்வீகக் கலையென்றும், அதைத் தெய்வத்துக்கே அர்ப்பணமாக்க வேண்டும் என்றும் சொன்னேன். உனக்கு நினைவு இருக்கிறதா?''

சிவகாமிக்கு நினைவு வந்தது. அதை இப்போது எதற்காகச் சொல்கிறார் என்று அவள் உள்ளம் சிந்தித்தது. முகத்தை நிமிர்த்தாமல் குனிந்த வண்ணம், ''நினைவு வருகிறது!'' என்றாள்.

''குழந்தாய்! தெய்வத்துக்கு உரிமையாக்க வேண்டிய பொருளை மனிதர்

களுக்கு உரிமையாகக் முயன்றால், அதனால் நீங்கு வராமல் என்ன செய்யும்? ஏதோ இந்த மட்டும் மாமல்லன் உயிர் தப்பிப் பிழைத்தது பல்லவ இராஜ்யம் செய்த பாக்கியம் தான்!''

அப்போது சிவகாமி சட்டென்று தலையை நிமிர்த்தி நீர் ததும்பிய கண்களினால் சக்கரவர்த்தியை ஏறிட்டுப் பார்த்து. ''பல்லவேந்திரா! தாங்கள் ஏதேதோ கூடமாகப் பேசுகிறீர்கள். நான் கல்வி கேள்வியற்றவள்; ஏழைச் சிற்பியின் மகள். என்னைச் சோதிக்க வேண்டாம்!'' என்று விம்மினாள்.

மகேந்திரர் அப்போது சிவகாமியின் விரிந்த கூந்தலை அருமையுடன் தடவிக் கொடுத்து, அன்பு ததும்பும் குரலில் கூறினார்: ''அம்மா சிவகாமி! உன்னை நான் சோதிக்கவில்லை. உன் தந்தை ஆயனருக்கும் எனக்கும் எப்பேர்ப்பட்ட சிநேகம் என்பது உனக்குத் தெரியாதா? அவருடைய மகளாகிய நீ எனக்கும் மகள் தான்; கனவிலும் உனக்குக் கெடுதல் எண்ண மாட்டேன். உன் தந்தை எப்படிச் சிற்பக் கலையில் ஈடு இணை இல்லாத பெருமை வாய்ந்தவரோ, அதுபோல் நீயும் பரதக் கலையில் சிறந்து விளங்குகிறாய். உன்னுடைய கலைத்திறமை இன்னும் பகோந்நதத்தையடைந்து பரத கண்டம் எங்கும் உன்னுடைய புகழ் விளங்க வேண்டும் என்பது என் மனோரதம். அதற்கு எதுவும் குறுக்கே நிற்கக் கூடாது; யாரும் தடையா யிருக்கக் கூடாது என்பது என் எண்ணம். அப்படிக்குறுக்கே தடையாக நிற்பவன் என்னுடைய சொந்த மகனாகவே இருந்த போதிலும், அந்தத் தடையை நான் நீக்க முயல்வேன்.''



சிவகாமி திடுக்கிட்டவளாய் முகத்தில் அவநம்பிக்கை தோன்ற மகேந்திர பல்லவரை ஏறிட்டுப் பார்த்தாள்.

''கொஞ்சம் பொறு, குழந்தாய்! முழுமையும் சொல்லி விடுகிறேன். பிறகு உன் இஷ்டம் போல் தீர்மானம் செய்துகொள். சற்று முன் நான் ஏதோ கூடமாய்ப் பேசுகிறேன் என்று கூறினாய். உண்மைதான். உன்னிடம் வெளிப்படையாகச் சொல்வதற்குச் சங்கோசப்பட்டுக் கொண்டுதான் அவ்விதம் கூறினேன். நீ அறிவாளியாகையால் தெரிந்து கொள்வாய் என்று நினைத்தேன். ஆனால், தற்சமயம் உன் மனம் பல காரணங்களால் குழம்பிப் போயிருக்கிறது. அதனால் நீ தெரிந்து கொள்ளவில்லை. எனவே நான் சொல்ல விரும்பியதை — உன்னுடைய நன்மைக்காகச் சொல்ல வேண்டியிருப்பதை—



பச்சையாகவே சொல்லி விடுகிறேன். அதனால் உன் மனத்துக்கு வருத்தம் நேர்ந்தால், என்னை மன்னித்துவிடு!'' என்று கூறி மகேந்திர பல்லவர் ஒரு பெருமூச்சு விட்டார். அச்சமயம் அவருடைய முகக் குறி மிகவும் கடினமான காரியத்தைச் செய்வதற்கு ஆயத்தமாகிறவரைப் போலக் காணப்பட்டது.

சிவகாமி மறுபடியும் தலை குனிந்து தரையைப் பார்த்த வண்ணம் இருந்தாள். ஏதோ ஒரு பெரிய விபரீதத்தை எதிர்பார்த்து அவளுடைய இருதயம் விம்மிற்று; இடையிடையே இரண்டொரு சொட்டுக் கண்ணீர் பூமியில் விழுந்தது.

''சிவகாமி! கேள்: உன் தந்தை கல்லைக் கொண்டு உயிர்ச் சிலைகளைச் சமைக்கிறார். அதுபோலவே பிரம்மதேவன் மண்ணைக் கொண்டு பூலோகத்தில் உள்ள சகல ஜீவராசிகளையும் படைக்கிறான். ஆனால், அசாதாரண அழகு படைத்த ஸ்திரீகளைப் பிரம்மதேவன் சிருஷ்டிக்கும்போது தன்னுடைய நாலிரு கண்களிலிருந்து சொட்டும் கண்ணீரையும் மண்ணுடனே கலந்து சிருஷ்டிப்பதாகச் சொல்வதுண்டு. அப்படிப்பட்ட அசாதாரண சௌந்தரியவதிகளால் உலகத்திலே எத்தனையோ துன்பங்கள் உண்டாகுமென்று பிரம்மதேவனுக்குத் தெரிந்தபடியினாலேதான் அப்படி அவன் கண்ணீர் விட்டுக் கொண்டே அவர்களைப் படைப்பானாம். குழந்தாய்! உன்னைப் படைக்கும்போது பிரம்மதேவன் கண்ணீர் பெருக்கிக்கொண்டுதான் படைத்தானோ என்று நான் சில சமயம் எண்ணுவதுண்டு. அத்தகைய அற்புத சௌந்தரியம் உன் மேனியில் குடிகொண்டிருக்கிறது. அது போதாதென்று உலகிலேயே இணையற்ற சௌந்தரியக் கலையும் உன்னிடம் சேர்ந்திருக்கிறது. நீ குழந்தையாயிருந்த வரையில் இதெல்லாம் எனக்குத் தோன்றவில்லை. ஆயனரைப் போலவே நானும் உன்னை என் செல்வக் கண்மணியாக எண்ணி மடியில் வைத்துக் கொண்டும், தோளில் போட்டுக்கொண்டும் கொஞ்சிக் குலாவி மகிழ்ந்தேன். ஆனால், நீ யௌவனப் பிராயம் அடைந்த பிறகு, உன்னைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு, 'ஐயோ! இந்தப் பெண்ணால் உலகில் விபரீதம் ஏதும் ஏற்படாமல் இருக்க வேண்டுமே!' என்ற பச்சாத்தாபம் உண்டாகும். இரண்டு வருஷங்களுக்கு முன்னால் விபரீதத்துக்கு அறிகுறிகள் தோன்றின. குழந்தைப் பிராயத்தில் உனக்கும் மாமல்லனுக்கும் ஏற்பட்டிருந்த குற்றமற்ற சிநேகம் திடீரென்று காதலாக மாறியதைக் கண்டேன். இந்தத் தகாத காதலை எப்படித் தடுப்பது, உங்கள் இருவருடைய மனமும் புண்படாமல் எப்படி உங்களைப் பிரிப்பது என்று நான் யோசித்துக்கொண்டிருந்த போதே இந்த மகா யுத்தம் வந்தது. நான் அவசரமாகப் போர்க்களத்துக்குப் போக வேண்டியதாயிற்று. நான் இல்லாத சமயத்தில் நீயும் மாமல்லனும் சந்திக்கக் கூடாது என்பதற்காகவே அவன் காஞ்சிக் கோட்டைக்கு வெளியே வரக்கூடாதென்று கண்டிப்பான உத்தரவு போட்டுவிட்டுப் போனேன்...''

குனிந்து கொண்டிருந்த சிவகாமி தன்னை அறியாத ஆத்திரத்துடன் மகேந்திர பல்லவரை ஏறிட்டுப் பார்த்தாள். கண்ணீர் ததும்பிய அவளுடைய கூரிய கண்களிலே தோன்றிய கோப ஜ்வாலை, 'சோ'வென்று மழை

# வியப்பு ஏதுமில்லை!!!

காஞ்சியை நினைத்தால் காமாட்சியும்
காசியை நினைத்தால் விசாலாட்சியும்
மதுரையை நினைத்தால் மீனாட்சியும்
அழகிய அசல் பட்டுப் புடவைகளை
நினைத்தால் சாரதா'ஸும் நினைவிற்கு
வருவதில் வியப்பு ஏதுமில்லை!!!

சாரதாஸின் பட்டுப் புடவைகளை
அணிந்து
லட்சுமிகரமாக
விளங்குங்கள்.





# சாரதாஸ்

பட்டுப் புடவைகளுக்கு
நம்பிக்கையான இடம்

தன் பில்டிங், மவுண்ட் ரோடு, சென்னை-2. போன்: 87177

---

32, N.S.B. ரோடு, திருச்சி-2. போன்: 7077



பெய்து கொண்டிருக்கும்போது இருண்ட வானத்தில் பளிச்சிடும் மின்னலைப் போல் ஜொலித்தது! அதனால் ஒரு கணம் தயங்கி விட்டுச் சக்கரவர்த்தி பின்னர் தொடர்ந்து கூறினார்: ''சிவகாமி! உன்னையும் மாமல்லனையும் அவ்வாறு பிரித்து வைத்தபோது, அதனால் உங்களுடைய நேயம் குன்றி விடும் என்ற எண்ணம் எனக்கில்லை. காற்றினால் பெரு நெருப்புக் கொழுந்து விட்டுக் கிளம்புவது போல் கட்டாயப் பிரிவினால் உங்களுடைய காதல் இன்னும் ஜ்வாலை விட்டு வளரக் கூடும் என்பதை ஒருவாறு நான் எதிர்பார்த்தேன். எனவே, உங்களுடைய காதலைத் தடுக்கும் எண்ணத்துடன் உங்களை நான் பிரித்து வைக்கவில்லை. நான் இல்லாத சமயத்தில் மாமல்லனும் நீயும் சந்தித்தால் அதனால் வேறு பெரும் அபாயம் நேரும் என்று என்னுடைய உள்ளுணர்ச்சி சொல்லிற்று. புதையலைப் பூதம் காக்கிறதென்றும், ஜீவரத்தினத்தை நாக சர்ப்பம் காக்கிறது என்றும் சொல்வார்களே, அது போல் கலைப் பொக்கிஷமாகிய உன்னைக் காப்பாற்றுவதற்கோ அல்லது கபளீகரம் செய்வதற்குத்தானோ, — ஏதோ ஒரு மாய சக்தி உன்னைத் தொடர்வதாக எனக்குத் தோன்றியது. அதனாலேயே மாமல்லன் உன்னை நெருங்க முடியாதபடி நான் ஏற்பாடு செய்து விட்டுப் போனேன். நான் எதிர்பார்த்தபடியே உங்களைப் பிரித்து வைத்ததனால் உங்கள் காதல் குன்றாமல் கொழுந்து விட்டு வளர்ந்தது. இதை மாமல்லன் உனக்கு எழுதிய ஓலைகளினால் அறிந்தேன்.''

''என்ன?'' என்று சிவகாமி அளவில்லாத வியப்புடனும் அருவருப்புடனும் சக்கரவர்த்தியை நோக்கினாள்.

''ஆமாம், சிவகாமி! மாமல்லன் உனக்கு எழுதிய ஓலைகள் — நீ மரப்பொந்தில் பத்திரப் படுத்தி யிருந்த ஓலைகள் — என்னிடந்தான் வந்து சேர்ந்தன. அவ்வளவு நீசத்தனமான காரியத்தை நான் செய்ய வேண்டியிருந்தது. எல்லாம் இந்தப் பல்லவ இராஜ்யத்துக்காகத்தான். குழந்தாய்! சாதாரண மனிதர்களுக்குத் தர்மம் வேறு; அரச குலத்தினருக்குத் தர்மம் வேறு. உன் தந்தையைக் கேட்டால் இதைச் சொல்வார். மாமல்லன் ஒரு வியாபாரியின் மகனாகவோ அல்லது ஒரு சிற்பியின் மகனாகவோ இருந்தால் அவனுக்கும் உனக்கும் நடுவில் நான் ஒரு நாளும் நிற்க மாட்டேன். உங்களுடைய தெய்விகமான காதலைக் கண்டு நான் களித்துக் கூத்தாடுவேன். ஆனால், இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின் நன்மைக்காக உங்கள் இருவரையும் பிரித்து வைக்கும் கொடுமையான கடமை எனக்கு ஏற்பட்டது....''

சிவகாமிக்கு இப்போது எங்கிருந்தோ அசாத்தியமான தைரியம் பிறந்தது. முகபாவத்திலும், குரலிலும் நிகரில்லாத கர்வம் தோன்ற, ''பிரபு! எங்களைத் தாங்கள் பிரித்து வைக்கப் பார்த்தீர்கள். ஆனால் அரசர்களைக் காட்டிலும் அதிக சக்தி வாய்ந்த விதி எங்கள் பக்கத்தில் இருந்தது. ஏரி உடைப்பையும் வெள்ளத்தையும் அனுப்பி எங்களை இந்தக் கிராமத்தில் சேர்த்து வைத்தது!'' என்றாள்.

''ஆம், சிவகாமி! ஆனால் உங்களைச் சேர்த்து வைத்த அதே விதி நான் செய்திருந்த ஏற்பாடு எவ்வளவு அவசியமானது என்பதையும் எடுத்துக் காட்டியது. இந்த விஷக் கத்தியே அதற்கு அத்தாட்சி!'' என்று மகேந்திர பல்லவர் கூறி, மீண்டும் அந்த விஷக் கத்தியை எடுத்துச் சிவகாமியின் கண்முன்னால் காட்டினார்.

### நாற்பத்தெட்டாம் அத்தியாயம்

## மகேந்திர பல்லவர்

சிவகாமி வெருண்ட கண்களுடன் அந்த நாகப் பிடி அமைந்த கத்தியைப் பார்த்தாள். குரல் நடுங்க, நாத் தழுதழுக்க விசித்திர சித்தரைப் பார்த்துக் கூறினாள்:

''பல்லவேந்திரா! எந்தப் பாவியின் கரம் இந்த விஷக் கத்தியைப் பிடித்து

மாமல்லருடைய முதுகில் செலுத்த யத்தனித்தது! கிருபை கூர்ந்து அதைச் சொல்லுங்கள். என்னால் இது நேர்ந்த தாயிருக்கும் பட்சத்தில்...'' என்று மேலும் அவள் பேசுவதற்குள், சக்கரவர்த்தி குறுக்கிட்டார்: ''ஆத்திரப்பட்டுச் சபதம் ஒன்றும் செய்ய வேண்டாம், சிவகாமி! இந்தப் பெரும் அபாயம் உன்னால் நேர்ந்ததுதான். ஆனால் நீ அறியாமல் நேர்ந்தது. இந்தக் கத்தி யாருடையதாயிருக்கும் என்று உனக்கு ஒன்றும் தெரியவில்லையா?'' என்று கேட்டார்.

''இம்மாதிரிக் கத்தியை நான் பார்த்ததேயில்லை பிரபு!''

''பெயரிலேயே பாம்பையுடைய மனிதர் ஒருவரை உனக்குத் தெரியாதா, அம்மா?''

''நாகநந்தியடிகளா?'' என்று சிவகாமி கேட்டபோது, அவளுடைய குரலில் வியப்பும் பயமும் ததும்பின.

''ஆம்! அவரேதான்!''

''ஐயோ! அவர் எதற்காக மாமல்லரைக் கொல்ல முயல வேண்டும்? நம்ப முடியவில்லையே?''

''ஏன் நம்ப முடியவில்லை? இதைவிட அதிசயமான பயங்கரத் துவேஷங்களைப் பற்றி நீ கேட்டதில்லையா?''

''நாகநந்தி எதற்காக மாமல்லரைத் துவேஷிக்கிறார்? ஐயோ! காவித் துணி தரித்த புத்த பிக்ஷுவா இவ்விதம்...?''

''சிவகாமி! புத்த பிக்ஷுவாயிருந்தாலென்ன? யாராயிருந்தால் என்ன? ஸ்திரீ சௌந்தரியத்தினால் புத்த பிக்ஷுவின் மனம் கெட்டுப் போகாதா? விசுவாமித்திரருடைய கடும் தவத்தையே மேனகையின் சௌந்தரியம் கலைத்துவிட்டதே! புத்த சங்கங்கள் சீர்கெட்டுப் போயிருக்கும் இந்த நாளில் இது என்ன அதிசயம்?''

''என்ன சொல்கிறீர்கள்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! நாகநந்தி எதற்காக மால்லரைக் கொல்லப் பார்த்தார்?''

''உன்னுடைய சௌந்தரியமாகிய விஷம் பிக்ஷுவின் தலைக்கேறியதனால்தான், அம்மா! வேறு என்ன இருக்க முடியும்? புத்த பிக்ஷுவின் கடின உள்ளத்தையும் உன் மேனி அழகு கவர்ந்தது; மாமல்லனுடைய குழந்தை இருதயத்தையும் கவர்ந்தது. ஆனால், நீ உனது தூய உள்ளத்தை மாமல்லனுக்கே கொடுத்தாய். பிக்ஷுவின் துவேஷத்துக்கு அதுதான் காரணம். இந்தப் பாறையில் நீயும் மாமல்லனும் நேற்றிரவு பேசிக் கொண்டிருந்தபோது, இதே பாறைக்குப் பின்னால் புத்த பிக்ஷு கையில் இந்த விஷக் கத்தி



யுடன் ஒளிந்திருந்தார். கிராமத்துக் கருகில் உள்ள கோயில் வரையில் உங்களைப் பின்தொடர்ந்து வந்தார். கடவுளின் அருளும் குண்டோதரனுடைய சர்வ ஜாக்கிரதையும் சேர்ந்துதான் மாமல்லனுடைய உயிரை நேற்றுக் காப்பாற்றின...''

''குண்டோதரனா காப்பாற்றினான்? எப்படி, பிரபு?''

''உங்களுக்கும் பிக்ஷுவுக்கும் தெரியாமல் குண்டோதரன் உங்களைப் பின்தொடர்ந்து வந்தான். பிக்ஷு கோயில் மதில்மேல் ஏறிக் குதித்தபோது இந்தக் கத்தி தவறிக் கீழே விழுந்தது. அதை அவன் எடுத்துக் கொண்டான். பிக்ஷுவை நள்ளிரவில் கோயில் மடப்பள்ளியில் விட்டுக் கதவைத் தாழிட்டுக் கொண்டு வந்து எங்களிடம் எல்லா விவரங்களையும் சொன்னான். நாங்கள் வந்து பார்ப்பதற்குள் பிக்ஷு மடைப்பள்ளியிலிருந்து மாயமாகி விட்டார்.''

இவ்விதம் மகேந்திர பல்லவர் சொல்லி வந்தபோது சிவகாமியின் முகத்தில் அவ்வப்போது ஏற்பட்ட அதிசயமான மாறுதல்களையெல்லாம் அவர் கவனியாமல் இல்லை.

உண்மையில் நாகநந்தியைப் பற்றிப் பேச்சு வந்ததிலிருந்து சிவகாமியின் பாதி மனம் இங்கேயும் பாதி மனம் மடத்திலேயும் இருந்தது. மடத்து உள் அறையில் தூண் மறைவில் நாக

நந்தி நின்ற தோற்றம் அவள் மனக் கண் முன் வந்து கொண்டே யிருந்தது.

இன்னும் அந்தப் பாதக பிக்ஷு அங் கேயே இருப்பாரா? இருந்தால், சக்கர வர்த்தியின் கையில் உள்ள கத்தியை வாங்கிக் கொண்டு போய் ' அவரைத் தன் கையாலேயே கொன்றுவிட வேண் டும் என்று சிவகாமிக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது.

''பல்லவேந்திரா! அப்பா எங்கே? நான் உடனே மடத்துக்குப் போகவேண் டும்!'' என்றாள் சிவகாமி.

''தாயே! என் கோரிக்கையை இன் னும் நீ கேட்கவே இல்லையே? நான் கோரி வந்த வரத்தைக் கொடுக்க வில்லையே?''

''இப்படி யெல்லாம் பேசி ஏன் என்னை வதைக்கிறீர்கள்? சிற்பியின் மகளுக்குக் கட்டளையிடுங்கள்!''

''கட்டளை இல்லை, அம்மா! உன்னி டம் வரம்தான் கோருகிறேன். அதுவும் எனக்காகக் கோரவில்லை. பல்லவ சாம் ராஜ்பத்துக்காகக் கோருகிறேன். இந்த சாம்ராஜ்யத்தைப் பெரும் விபச் விருந்து காப்பாற்றும் சக்தி இப்போது உன் கையில் இருக்கிறது.''

''நான் என்ன செய்ய வேண்டும்?''

''மாமல்லனுக்கு ஓலை எழுதித் தர வேண்டும்.''

''என்ன ஓலை?'' என்று சிவகாமி திகி லுடன் கேட்டாள்.

''மாமல்லனை நீ விடுதலை செய்வ தாக எழுத வேண்டும். உன்னை மறந்து விடும்படி எழுத வேண்டும்.''

''பிரபு! இந்த ஏழைப் பெண்ணை ஏன் இப்படிச் சோதனை செய்கி றீர்கள்? மாமல்லரையாவது நான் விடு தலை செய்யவாவது? என்னை மறக்கும் படி அவருக்கு நான் எப்படி எழுதுவேன்? நான் சம்மதித்தாலும் இந்தக் கை சம்மதியாது சுவாமி!''

''சிவகாமி! காஞ்சிக்கு மூன்று காத தூரத்தில் வாதாபியின் படைகள் வந் திருக்கின்றன. ஆயினும் நான் இங்கே உன்னுடன் வாதாடிக் கொண்டிருக்கி றேன். இதிலிருந்தே என்னுடைய கோரிக்கை எவ்வளவு முக்கியமானது என்று உனக்குத் தெரியவில்லையா?''

## கணக்கு வழக்கில் கார்ட்டூன்கள்




1973 இந்தியாவுக்கு மிகவும் கஷ்டமான ஓர் ஆண்டு...



தேசத்தின் மூலை முடுக்குகளுக்கெல் லாம் கூட எமது தயாரிப்புக்களை எட்டச் செய்யும் ஆற்றல்...

பிலிப்ஸ் இந்தியா நிறுவனம் 1973ம் ஆண்டுக்கான வரவு செலவு அறிக்கையைப் பங்குதாரர்களுக்கு அனுப்பியுள்ளது. இதில் ஆர். கே. லக்ஷ்மணனின் கார்ட்டூன்கள் இடம் பெற்றுள்ளது ஒரு புதுமை.



...போக்குவரத்தில் இடைஞ்சல்கள் பல இருந்த போதிலும் ஏற்றுமதி பதினேழு சதம் அதிகரித்தது...



...அரசாங்கத்துக்கு அனுப்பி வைத்த பல விண்ணப்பங்கள் நிராகரிக்கப்பட்டன...

மையை இன்னும் பட்டவர்த்தனமாகச் சொல்கிறேன், கேள்! வாதாபியின் சமுத்திரம் போன்ற சைன்யங்களை எதிர்த்து நிற்பதற்கு வேண்டிய படைபலம் இப்போது பல்லவ ராஜ்யத்துக்கு இல்லை. இந்த நிலைமையில், தெற்கேயிருந்து பாண்டியனுடைய பெரும் படையும் பல்லவ இராஜ்யத்தைத் தாக்க வருகிறது. நீ மனம் வைத்து என் கோரிக்கையை நிறைவேற்றினால், பாண்டிய சைனியம் பல்லவ சைனியத்துடன் சேர்ந்து விடும். இரண்டும் சேர்ந்தால் வாதாபிப் படைகளை வெற்றி கொள்ளலாம், சிவகாமி! பல்லவ இராஜ்யத்துக்கு இந்த மகத்தான உதவியை நீ செய்வாயா?''

''எனக்கும் பாண்டியர் படையெடுப்புக்கும் என்ன சம்பந்தம் பிரபு? பல்லவ இராஜ்யத்துக்கு இந்த ஏழைச் சிற்பியின் மகள் என்ன உதவியைச் செய்ய முடியும்?''

''உன் மனத்தைப் புண்படுத்தவேண்டாம் என்று பார்த்தால் நீ விட மாட்டேன் என்கிறாய், சிவகாமி! பாண்டிய இராஜகுமாரியை மாமல்லனுக்குக் கல்யாணம் செய்து கொள்ளுமாறு தூது அனுப்பினார்கள். அதற்கு மாமல்லன் இணங்காதபடியால் பாண்டியனுடைய சைனியம் நம்மீது படையெடுத்து வருகிறது. கல்யாணம் செய்துகொள்வதாகச் சம்மதம் தெரிவிக்க வேண்டியதுதான்; உடனே பாண்டிய சைனியம் நம்முடன் சேர்ந்துவிடும். நீ மாமல்லனுக்கு விடுதலை கொடுத்தால், அவனை இதற்கு இணங்கச் செய்வேன். என்ன சொல்கிறாய், தாயே! பல்லவ இராஜ்யத்துக்கு உயிர்ப் பிச்சை அளிப்பாயா?'' என்று மகேந்திரர் இறைஞ்சினார்.

சிவகாமி பூமியில் சட்டென்று உட்கார்ந்து, ''மாட்டேன், மாட்டேன்! என்னால் முடியாது!'' என்று அலறினாள். பின்னர், விம்மிக்கொண்டே, ''பல்லவேந்திரா! உங்களுடைய கையிலுள்ள விஷக் கத்தியை என் மார்பிலே பாய்ச்சிக் கொன்றுவிடுங்கள். தங்கள் குமாரருக்கு விடுதலை கிடைத்து விடும். பல்லவ இராஜ்யமும் காப்பாற்றப்படும். ஒரு பெரிய இராஜ்யத்தைக் காப்பதற்காக ஓர் அபலைப் பெண்ணைக்


...மூலதனத்தைக் கொண்டு இயந்திரக் கருவிகளை வாங்க லைசென்ஸ் கிடைத்து விட்டது என்பதை மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறோம்...




...ஆராய்ச்சியும் அபிவிருத்தியும்...


மூன்று வருஷங்களுக்கு நீடிக்கும் ஊதியம், உழைப்பு பற்றிய இரு தரப்பு ஒப்பந்தம்...

கொன்றால் என்ன? கத்தியை எடுங்கள், பிரபு! தங்களுக்குத் தைரியம் இல்லா விட்டால் கத்தியை இங்கே கொடுங்கள். நானே என் மார்பில் செலுத்திக்கொள் கிறேன்'' என்றாள்.

''சிவகாமி! நீ ஜயித்தாய்! நான் தோற்றேன்!'' என்றார் மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி.

* * *

பாறையடியில் மேலே கூறிய சம்பாஷணை நடந்து ஒரு நாழிகைக்குப் பிறகு சிவகாமியும் ஆயனரும் மண்டபப்பட்டுக் கிராமத்தை அடைந்தார்கள். மடத்து வாசலை அணுகியதும் சிவகாமி மிகவும் பரபரப்புடன் முதலில் பிரவேசித்து அறைக்குள்ளே சென்று பார்த்தாள். தூண் மறைவில் பிக்ஷுவைக் காணவில்லை. மடத்துக்குள் வேறு எங்கேயும் அவரைக் காணவில்லை.

ஏதோ ஒரு சந்தேகம் உதிக்கவே, அவசரமாகச் சென்று தனது ஆடை ஆபரணப் பெட்டியைத் திறந்து பார்த்தாள். கையினால் பல முறை துழாவிப் பார்த்தாள். ஆடை ஆபரணங்களை யெல்லாம் எடுத்து உதறிப் பார்த்தாள். எப்படிப் பார்த்தும், சக்கரவர்த்தி கொடுத்த சிங்க முத்திரையுள்ள இலச்சினையைக் காணவில்லை!

அதே சமயத்தில் வராக நதிக்கு அக்கரையில் ரத சாரதி கண்ணபிரானிடம் புத்த பிக்ஷு மேற்படி சிங்க இலச்சினையைக் காட்டிக் கொண்டிருந்தார். காட்டி, தம்மை அவனுடைய ரதத்தில் காஞ்சிமா நகருக்கு விரைவில் அழைத்துப் போகும்படி கட்டளையிட்டார். கண்ணபிரான் தயக்கத்துடன் அந்தக் கட்டளையை ஒப்புக் கொண்டு, பிக்ஷுவை ரதத்தில் ஏறும்படி கூறினான்.

இதையெல்லாம் சற்றுத் தூரத்தில் மரங்களின் மறைவில் நின்று சக்கரவர்த்தியும் சத்ருக்னனும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சத்ருக்னன் பாய்ந்து சென்று கண்ணபிரானைத் தடுப்பதற்கு யத்தனித்தபோது சக்கரவர்த்தி அவனுக்குச் சமிக்ஞை செய்து நிறுத்தினார்.

புத்த பிக்ஷு ரதத்தில ஏறுவதையும் கண்ணபிரான் வேண்டா வெறுப்பாக ரதத்தின் குதிரைகளைத் தட்டி விடுவதையும், வீரர்கள் ரதத்தைப் பின் தொடர்ந்து செல்வதையும் அவ்விருவரும் பார்த்துக் கொண்டு சும்மா நின்றார்கள்.

சத்ருக்னனுடைய முகத்தில் கோபம் கொதித்தது. சக்கரவர்த்தியின் முகத்திலோ புன்னகை தவழ்ந்தது.

(தொடரும்)

### சிந்தனைத் துளி

நாம் சகோதரர்கள் போல் இணைந்து வாழக் கற்க வேண்டும், அல்லது முட்டாள்களைப் போலச் சேர்ந்து மடிய வேண்டும்.

மார்ட்டின் லூதர்கிங் ஜூனியர்.

''என் பெண்ணுக்கு உங்க காலேஜில் அட்மிஷன் கொடுங்கள். இல்லாதபோனால் உங்க பையனுக்கு அவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு உங்க வீட்டிலாவது அட்மிஷன் கொடுங்கள்!''



### சிறைச்சாலை என்னதான் செய்யாது?

ஜபல்பூர் சிறையில் உள்ள இரண்டு ஆயுள் தண்டனை கைதிகள் அங்கு வரும்போது ஆறாவது வகுப்பு வரை படித்திருந்தார்கள். இப்போது பட்டதாரிகளாகியிருக்கும் அவர்கள் டாக்டர் பட்டம் பெறவும் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதிக் கொண்டிருக்கிறார்கள்!

உஜ்ஜியினி நகரத்திலுள்ள ஒரு சிறைச்சாலையில் கொலைக் குற்றம் செய்துவிட்டு ஆயுள் தண்டனை அனுபவித்து வரும் பதினைந்து கைதிகள் தங்கள் மனைவி மக்களுக்கு மாதா மாதம் பணம் அனுப்பிக்கொண்டிருக்கிறார்கள்! எப்படி? அங்குள்ள 'ஸ்டேட் பாங்க்' கைதிகள் தொழில் ஆரம்பிப்பதற்குக் கடன் கொடுக்கிறது. (ரூ. 50 முதல் 500 வரை). சிறைக்குள்ளேயே உள்ள ஒரு 'ஷெட்'டில் கைதிகள் தொழில் நடத்துகிறார்கள். ஊதுவத்தி, நாப்கின் இம்மாதிரி பொருட்கள் தயாரித்து விற்பனைக்கு அனுப்புகிறார்கள். மாதம் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கடன் தவணைக்கும் மீதியைக் குடும்பத்துக்கும் அனுப்புகிறார்கள்.

'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'-சரோஜா ராமச்சந்திரன்



# கால் கர்ல்

விலை போகும் சரக்கு என்றும் வியாபாரிகள் அதைச் சுற்றி வட்டமிடுவதுதானே இயல்பு? திரையுலக வியாபாரிகளும் தங்களுக்கு அப்படி ஒரு சரக்குக் கிடைத்துவிட்ட களிப்பில் ஒரே பொருளைச் சுற்றி வட்டமிடுகிறார்கள், சமீப காலமாக. அதே பொருளை மையமாகக் கொண்ட கதைதான் கால் கர்ல்.

ஆம், அவள் ஒரு கடைச் சரக்கு. அவள் மட்டுமென்ன, இப்படத்தில் வரும் மற்றப் பெண் பாத்திரங்களுமே அவ்வகையைச் சேர்ந்தவர்கள்தாம். ஆனால் அவர்கள் அப்படி ஆனதற்குக் காரணம் வெவ்வேறு சூழ்நிலை!

இப்படி ஒரு சூழலைக் கதைக்குப் பகைப் புலனாகக் கொண்டாலும், பல்வகைக் குணாதிசயங்கள் கொண்ட பாத்திரங்களை உலாவ விட்டுக் கதையைப் பின்னிக் கொண்டு போயிருக்கும் முறை, 'சீக்வென்ஸ்' என்னும் தொடர்பு, வளமான உரையாடல்கள்—எல்லாம் கைகொடுத்து உதவிக் கதையைத் தொய்ய விடாமல் காக்கின்றன. இப்படி நல்ல விலை போகும் சரக்காக்கித் தந்தவர் திரு கே. ஏ. அப்பாஸ்.

கடைச் சரக்காக நடிக்கும் ஜாஹிரா கால் கர்லாகத் தம் பெயரின் பொருளுக்கேற்ப வெளிப்படையாக நடித்து ஒருபுறம் ஜொலிக்கிறார். இன்னொரு புறம் கதாநாயகனுக்கு மாடல் கர்லாக நின்று அவன் மனத்தில் இடம் பெறும் அதே வேளையில் ரசிகர்களின் உள்ளத்தையும் நிறைக்கிறார்; படம் முழுவதும் பல கட்டங்களில் பல உணர்வுகளைக் கொட்டி, நடிப்பால் உயர முயலுகிறார்; அவரைப் பகடையுருட்டும் பல சூழல்களிலும் தாக்குப் பிடித்து நிற்கிறார்.

கால் கர்ல் வாழ்க்கையை வெறுத்துக் காதல் வாழ்க்கைக்குத் திரும்ப முயல்வதைக் காட்டும் இடத்தில் 'டெலிபோன் தொடர்பை'த் துண்டித்துக் காட்டுவது நயமான உத்தி.

அடுத்தபடியாக இஃப்தெகார் பெரும் வியாபாரப் புள்ளியாக வந்து மிடுக்காக நடித்து — போலீஸ் அதிகாரியாக வந்து வந்து பழகியவராயிற்றே, மிடுக்குக்குக் கேட்கவேண்டுமா? — ஏற்ற பாத்திரத்தால் தாம் நஞ்சுள்ள நாகம் என்பதை விண்டு வைக்கிறார். கால் கர்லைக் கெடுத்தவரே அவர்! அவளுக்கும் தம் மகனுக்கும் உள்ள தொடர்பைக் குடும்பக் கௌரவத்தின் பெயரால் துண்டிக்க முயலும் கட்டத்தில், தம் மகளையே ஹோட்டல் அறையில் கண்டு பதறித் துடிக்கும் இடத்தில் நன்றாக நடித்துப் பெயர் வாங்க முயல்கிறார்!

[ஒரு ரகசியம்: இந்தக் கட்டம் அயல் நாட்டுக் கதை ஒன்றின் அப்பட்டமான காப்பி: இருந்தாலும் கதையில் பொருந்திய முறை கனகச்சிதம்!]

அவரது மனைவியாகவும் கதாநாயகனின் தாயாகவும் வரும் ஊர்மிளா பட், பூஜை புனஸ்காரம் என்று பத்தாம் பசலியாகத் தோன்றினாலும், உடல் தூய்மையைக் காட்டிலும் உள்ளத் தூய்மையை மதித்து, மனம் திருந்திய கால் கர்லையே தம் மருமகளாகக் கொள்ளும் புரட்சி மனப்பான்மை கொண்டவராகச் சித்திரிக்கப்படுகிறார். விக்ரம் கதாநாயகனாக வந்து பகற்றும் சிறிதும் இன்றித் தம் பங்கைக் கச்சிதமாக நிறைவேற்றுகிறார்.

சமுதாயத்தின் கண்களைத் திறக்கச் சரியான புது முயற்சி என்று பாராட்டும் வகையிலே பழங்கதை புதுமெருகுடன் பொலிகிறது. 'உல்ஃபத் மேன் ஜமானே கீ ஹர் ரஸ்ம் கோ டுக்ராவோ' என்னும் கருத்துச் செறிந்த பாடல் ஒரு முறைக்கு இரு முறையாகச் செவிக்கு உணவாகிறது.

எல்லாம் சரி, எடுத்துக் கொண்ட பிரச்னை? தீர்வு காணும் பிரச்னைதான்! எட்டோடு ஒன்பதாக இந்தக் கதையும் வழுக்கு மரம் ஏறி இறங்கியிருக்கிறது. எனவே, மிடுக்கு சரக்கில் இல்லை; வழங்கும் வியாபாரியிடமே இருக்கிறது!

—ரா.வீ.



# பிலிப்ஸ் ஃப்ளுரோஸெண்ட் லாம்புகளின் ஒளித்திறனை நீடிக்க வைப்பது எது ?

எலெக்ட்ரோடின் தரம், எமிட்டர் பேஸ்ட்டின் திண்மையும் அளவும், எமிட்டரின் இறுக்கமான ஒட்டும் திறன். இவைதான் ஃப்ளுரோஸெண்ட் லாம்பின் உழைப்பு காலத்தை நிர்ணயிக்கின்றன. அதனால் பிலிப்ஸ், அவர்களது டங்க்ஸ்டன் ஒயர் எலெக்ட்ரோடுகளை இருமுறைகள் அல்லாது, மும்முறைகள் காயில் செய்கின்றனர். அதன் விளைவாக, மிக அதிகமான அளவில் எமிட்டர் பேஸ்ட் அவற்றுள் இணைந்துள்ளது. டங்க்ஸ்டன் ஒயரிலிருந்து ஒளியைத்தரும் காஸுக்கு எலெக்ட்ரான்களைச் செலுத்த ஓர் நல்ல இணைப்புச் சாதனமாக இந்தப் பேஸ்ட் இயங்குகிறது

## ட்ரிப்பிள்

# ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவும்!




படிப்பது ஒன்று படித்தபின் செய்கிற வேலை வேறொன்று என்ற நிலையில் பல இளைஞர்கள் இன்று இருக்கிறார்கள். கல்விக்கும் காரியத்துக்கும் சம்பந்தம் இருப்பதில்லை. இதனால் வேலையில் சேருமுன் அதற்குரிய விசேஷப் பயிற்சியை வேறு அவர்கள் மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்தக் கால கட்டம் வீணாகிறது ஒரு புறம்; பயிற்சி காலத்துக்கு ஊதியம் குறைவது அல்லது இல்லாமலேகூடப் போவதுமறுபுறம்.

இந்தத் துயரத்துக்கு இளைஞர்கள் ஆளாகக் கூடாது என்ற பெருநோக்கு கொண்டார், சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு நெ. து. சுந்தரவடிவேலு.

வேலைச் சார்புள்ள கல்வி ( Job oriented education ) தேவை எனக் கண்டு அதற்கான பல திட்டங்களை வகுத்து அமுல்படுத்தியுள்ளார். இத்துறையில் இன்னும் முன்னேற்றம் காண நிறைய இடமிருக்கிறது என்றாலும், இன்று ஒரு தொடக்கம் ஏற்பட்டுள்ளதே பெரிய காரியம்தான். மாணவர் சமுதாயம் வாழ்த்தி வரவேற்கக்கூடிய இந்த அம்சம் தவிர வேறு பல புதிய முயற்சிகளையும் சென்னைப் பல்கலைக் கழகம் மேற்கொண்டுள்ளதை திரு சுந்தரவடிவேலு அவர்களுடன் பேசிக் கொண்டிருந்ததில் அறிய முடிந்தது.



"சென்ற நான்கு ஆண்டுக் காலத்தில் 73 புதிய பாடத் திட்டங்களை வகுத்துள்ளது சென்னைப் பல்கலைக் கழகம். முன்பெல்லாம் பாடத் திட்டங்களை மாற்றும் பணியை இதற்கென உள்ள வாரியம் (Board of studies) செய்வது வழக்கம். அந்த முறையை மாற்றி, நூறு கல்லூரிகளுக்குக் கடிதம் எழுதி அவர்களின் ஆலோசனைகளைத் தெரிவிக்கக் கோரினோம். பல்வேறு கல்லூரிகள் தெரிவித்த யோசனைகளையெல்லாம் ஆராய்ந்து அவற்றைக் கருத்தில் கொண்டு பாடத் திட்டம் மாற்றி அமைக்கப்பட்டது; புதிய பாடத் திட்டங்களும் உருவாக்கப் பெற்றன.

பி. எஸ்ஸி. யில் புதிய மூன்றாண்டுப் பட்டப் படிப்பு B. Sc. (Applied science) அமுலுக்கு வந்துள்ளது. ரசாயனம் பயின்றால் ரசாயனப் பொருட்களைத் தயாரிப்பதற்கான வழி முறைகளை விரிவாகப் பயில வாய்ப்புடண்டு. வேலைக்கு மனுப் போடாமல் இளைஞர்கள் தாங்களே சிறு தொழில்களைத் தொடங்குவதற்கான தன்னம்பிக்கை ஏற்படச்செய்வதே இதன் அடிப்படை நோக்கம்.

புத்தக வெளியீட்டுத் தொழிலை முக்கிய பாடமாகக் கொண்ட பி. ஏ. பட்டக் கல்வி, சுற்றுலா, பொதுஜனத் தொடர்பு, கூட்டுறவு கம்பெனிகளுக்கான செயலர் பயிற்சி ஆகிய பாடங்களில் பி. ஏ. பட்டப் படிப்பு—இவை முற்றும் புதியன. அந்த அந்தத் துறைகளில் பட்டதாரிகளுக்கு வேலை வாய்ப்புக்கள் ஏற்படுவதுடன், வேலையில் தனிப் பயிற்சி இன்றியே சிறப்பாகச் செயல்படும் வகையில் அமைந்துள்ள பாடத் திட்டங்கள் இவை. சோதனைக்கூட நுட்பத் தொழில் பட்டப் படிப்பு ஒன்றும் புதிதாக உருவாக்கப்பெற்றுள்ளது. இப்படிப்பில் தேர்ச்சி பெறுவோர்

## பிடித்தது பிடிப்பானால்...?

**அண்ணன்:** அந்தக் சட்டம் போட்டது என்ன விலே?
**தம்பி:** அந்தச் சட்டை வேண்டாம், எனக்குப் பிடிக்கலே!



**அண்ணன்:** எனக்குப் பிடிச்சிருக்கே!
**தம்பி:** உனக்குப் பிடிச்சப்புறம் நான்தானே அதைப் போட்டுக் கொண்டாக வேண்டும். அதனால் தான் அதை வாங்க வேண்டாம் என்கிறேன்!

- அகமகன்

---

மருத்துவ மனைகளில் பயன்படும் பல்வேறு நுண்ணிய கருவிகளைப் பராமரிக்கவும் பழுது பார்க்கவும் தகுதி பெற்றவர்களாக் திகழ் வார்கள்.

இவை தவிர மனை இயல் துறையில் ஏற் கனவே பட்டம் பெற்றவர்கள் ஓராண்டு பகுதி நேரம் படித்து உணவுப் பாதுகாப்பு, பாலர் பள்ளி அமைப்பு, கட்டட உள் அலங் காரக் கலை, உளவியல் இவற்றில் 'டிப்ளமா' பெறுவதற்குரிய புதிய பாடத் திட்டங்களை வகுத்துள்ளது பல்கலைக் கழகம்.

தென் இந்தியச் சமயங்களுக்கும் தத்துவங் களுக்குமான எம். ஏ. பட்டத்தை இரு வருடங்களுக்கு முன்பு உருவாக்கியுள்ளது குறிப்பிடத்தக்கது. இத்துறையில் பட்டம் பெறுவோர் இந்து அறநிலையப் பணிகளுக்கு ஏற்றவர்களாக இருப்பார்கள். கோயில் நிருவாக அதிகாரியாக நியமிக்கப்படுகிறவர் களுக்கு ஆகம விதி முறைகள் தெரியாமலிருந் தால் கோயில் சிப்பந்திகளுடன் அடிக்கடி விவாதங்கள், சச்சரவுகள் ஏற்படுமல்லவா ? அதைத் தவிர்க்க இக்கல்வி பயன்படுமே ?

பொறியியல் கல்லூரி ஆசிரியர்களுக்கு ஆசிரியர் பயிற்சி புதிதாக ஏற்படுத்தப்பட்டுள் ளது. துவக்கப்பள்ளி, நடுநிலைப் பள்ளி, உயர் நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்குத் தனிப் பயிற்சி இன்றியமையாததாக உள்ளது. கல்லூரி ஆசிரியர்களுக்கோ இதுவரை எந்தவிதப் பயிற்சியும் அளிக்கப்பட்டதேயில்லை ! கல்விப் புலமையோடு கற்றுக் கொடுக்கும் பயிற்சியும் இருந்தால் கல்லூரி மட்டத்தில் ஆசிரியர் களின் பணி மேலும் சிறக்கும் என்ற கருத்தில் அவர்களுக்கென ஒரு பயிற்சித் திட்டம் வகுத்துச் செயற்படுத்தி வருகிறது, சென் னைப் பல்கலைக் கழகம். இப்பயிற்சியினை முழு நேரம் முயன்று பெற வேண்டும் என்ற கட்டாயம்கூட இல்லை. பகுதி நேரப் படிப் பாகவும் பெறலாம் என்கிறார் துணைவேந்தர்.

**மா**ணவப் பருவத்திலேயே ஏட்டுப் படிப் போடு வேலைக்கான பயிற்சி அனுபவமும் வாய்க்கப்பெற்றால் எதிர்காலத்தில் அது சிறந்த பலனளிக்கும் என்பதைக் கருத்தில் கொண்டு நுடியலூர் கலைக் கல்லூரியில் பயிலும் 312 மாணவர்களுக்கும் அக்கம் பக்கத்தில் உள்ள தொழிற்கூடங்களில் வேலை வாய்ப்புப் பெற ஏற்பாடு செய்துள்ளது, பல்கலைக் கழகத்தின் வெற்றிகரமான ஒரு திட்டம். உடனுழைப்பின் உயர்வினை மாண வர்களும் உணர்ந்ததன் விளைவாக, எந்த வேலை வாய்ப்பினையும் நழுவ விடவில்லை. மாணவர்களுக்குப் பகுதி நேர வேலை வாய்ப்பு அளிப்பதை நமது அரசு கொள்கையளவில் ஏற்றுக் கொண்டதுடன், ஒவ்வொரு தனி யார்க் கல்லூரியும் அந்தப் பயிற்சிக்கென ஆண்டுக்கு ரூ. 5000 வரை செலவு செய்ய மான்யம் வழங்க ஆணை பிறப்பித்துள்ளது.

கோடை விடுமுறையின் போது மாணவர் களுக்கு வேலை தேடித் தரும் பணியைப் பல் கலைக் கழகம் நான்கு ஆண்டுகளாக மேற் கொண்டு நிறைவேற்றி வருகிறது. சென்ற ஆண்டு அறுநூறுக்கு மேற்பட்டவர்களுக்கு விடுமுறையில் வேலை கிடைத்தது.

படிப்பு முடிந்து பட்டம் பெற்றதும் என்ன வேலையை ஏற்கலாம், என்ன வேலை கிடைக்கும் என்பது குறித்து ஏதும் புரியாமல் குழம்புகின்றனர் இளைஞர்கள். அவரவர் தகுதிக்கேற்ப என்ன செய்யலாம் என்பதை எடுத்துக் கூற ஒவ்வொரு கல்லூரியிலும் ஆலோசகர் வேண்டும். அத்தகைய பயிற்சி பெற்ற ஆலோசகர்கள் இன்று இல்லாததால் அவர்களை உருவாக்கவென்றே தற்போது நிபுணர்களால் ஒரு பாடத்திட்டம் வகுக்கப் பெற்றுள்ளது! வருகிற கல்வி ஆண்டுத் தொடக்கம் பல்கலைக்கழகமே இப்பயிற்சி யினை நடத்தவிருக்கிறது.

உலக நாடுகள் பலவற்றிலும் வெளியாகும் சிறந்த நூல்களையும் சஞ்சிகைகளையும் பல் கலைக் கழகத்து நூலகம் வரவழைத்துக் கல்வி யாளர்கள் அவற்றைப் படிக்கும்படி ஊக்கு வித்து வருகிறது. சென்ற சில ஆண்டுகளில் நூல்கள், சஞ்சிகைகள் வாங்குவதற்காக ஒதுக்கப்பெற்றுள்ள தொகை மும்மடங்காக உயர்ந்துள்ளது !

**ப**ல்கலைக் கழகம் வெளியிடும் நூல்களைப் பற்றியும் குறிப்பிட வேண்டும். சென்ற நான்கு ஆண்டுகளில் பல்கலைக் கழகம் கண்கவர் வனப்புடன் குறைந்த விலை யில் வெளியிட்டுள்ள நூல்கள் 108. இவற்றில் தமிழ் நூல்கள் மட்டும் இருபத்து நான்கு ஆகும். 1929ம் ஆண்டில் வெளி யாகிய சம்ஸ்கிருத கவிதை நூல் ஒன்று கிடைக்காமலே இருந்து வந்ததால் 1973ல் அதன் மறு பதிப்பை வெளியிட்டுள்ளார்கள். மலையாள மொழியில் எஸ். கே. நாயர் எழுதிய கம்பராமாயணம் இரு காண்டங் களும் 'கர்நாடக கவி ராஜ மார்க்கம்' எனும் கன்னடக் கவிதை இலக்கிய விமரிசன நூலும் திருவாய்மொழி மறு பதிப்பும் போப்





அகில இந்திய ஸ்டேட் பாங்க் ஊழியர்கள் சங்கத்தில் வெளியார் தலையீடு கிடையாது என்பது ஒரு விசேஷம். அரசியல் கலப்பற்று உண்மையான தொழிற்சங்கமாக இயங்கும் இதற்குத் தேவையான சட்ட ஆலோசனைகளை வழங்குபவர் வழக்கறிஞர் திரு டோலியா.

இச் சங்கத்தின் வெள்ளி விழாவை யொட்டி 'தொழிற் சங்கங்களில் அரசியல் தலையீடு அவசியமா?' என்பது பற்றிக் கருத்தரங்கும் நடைபெற்றது. சென்னையில் நடைபெற்ற இந்தக் கோலாகலக் கொண் டாட்டத்தினை அமைச்சர் ஸ்ரீ சாவன் ஆரம் பித்து வைத்தார்.

திரு டோலியாவுக்குத் தமிழகத் தொழி லாளர் நல அமைச்சர் திரு ராசாராம் அவர் களும் சங்கத்தின் தலைவர் திரு மஜூம்தா ருக்கு நீதிபதி திரு கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களும் வெள்ளி விழா ஞாபகார்த்தப் பரிசு வழங்கினார்.

## தண்ணீர்ப் பஞ்சத்தில் கண்ணீர் இல்லை!

கடல் நீரைக் காய்ச்சி, பின் நீராவியைக் குளிர வைத்து நல்ல நீராக்கும் முயற்சியில் ஜெர்மன் கூட்டாட்சிக் குடியரசைச் சேர்ந்த பிரெமனிலுள்ள ஒரு தொழிற்சாலை வெற்றி கண்டுள்ளது. சுத்தப்படுத்திய நீரை ஒரு பெண்ணுக்குக் கொடுப்பதைப் படத்தில் காணலாம். (யு.பி.எஸ்)



எழுதிய ஆங்கில மொழி திருவாசகமும், கம்பராமாயணத்தையும், துளசிராமாயணத் தையும் ஒப்பு நோக்கி எழுதப்பெற்ற நூலும் சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள நூல்களுள் குறிப்பிடத்தக்கவை. டாக்டர் திருமதி சாரதா ராஜூ 193

பெருமை ஓங்குவதுடன் வருவாயும் பெருக வழியுண்டு — புத்தகங்கள் நிறைய விற்பனை யானால்! ஆனால் இத்தகைய நூல்களை லாப நோக்கு கருதி மட்டும் வெளியிட முடியா தல்லவா?

# யூகோ பாங்கில் இப்பொழுது உங்கள் ஃபிக்ஸெட் டிபாஸிட் 9% க்கு மேலாக பயனுடைய வட்டி பெறுகிறது

ரெக்கரிங் டிபாஸிட்டுடன்
ஃபிக்ஸெட் டிபாஸிட்டை
இணைப்பது மூலம்!

மற்ற விவரங்களுக்கு
உங்கள் அருகிலுள்ள
யூகோ பாங்க் கிளையுடன்
தொடர்பு கொள்ளுங்கள்.

தாங்களே
தங்களுக்கு
உதவ மக்களுக்கு
லாபகரமாக
உதவுகிறது

யுனைடெட் கமர்ஷியல் பாங்க்




UCOC-19 TAM



# விண்ணும் மண்ணும்

## 46. சிறைவாசம்

கி. ராஜேந்திரன்

பிற்பகலில் வெள்ளித் துகள்களாக ஜொலித்த சிற்றலைகள் மாலை நேரச்சூரிய ஒளியில் தங்கமய மாகப் பிரகாசித்தன. இப்போது மீண்டும் நிறம் மாறி அந்திவானச் சிவப்பைப் பிரதிபலிக்கத் தொடங்கியிருந்தது நீர்ப்பரப்பு. இன்னும் சற்று நேரத்தில் இருள் கவியத் தொடங்கும் போது அதுவே கரு நீலநிறமாக மாறிவிடும்.

மைக்கேல், தனது தற்போதைய வாசஸ்தல மான சிறிய வீட்டின் ஜன்னல் வழியே பார்க்கை யில் அவனுடைய மனம் பலவிதமான கவலை களில் ஆழ்ந்து அல்லல்பட்டுக் கொண்டிருந்த போதிலும் இயற்கையின் இந்த வர்ணஜால மாற் றங்களை ரசிக்காமல் இருக்க முடியவில்லை. கடல் நீர் உட்புகுந்ததால் ஏற்பட் டுள்ள ஒருசின்னஞ்சிறிய ஏகாந்த மான தீவில் தான் காவலில் வைக்கப்பட்டிருப் பதை அவன் அறிந்திருந்





தான். ஏராளமான தென்னை மரங்கள் சூழ்ந்து சோலையாக விளங்கிய அந்தத் தீவு மிகவும் மனோ ரம்மியமான ஒன்றுதான். வீடும் சிறிதேயானு லும் மிகவும் வசதியானது.

இந்த இடத்துக்கு அனுபமாவோடு தேன்நில வுக்கு வந்தால் எவ்வளவோ ஆனந்தமாய் இருக்கும். அவளோடு சேர்ந்து விசைப் படகில் ஏறிச் சுற்று வட்டாரத்தில் இதைப் போலவே உள்ள வேறு சில தீவுகளுக்கும் உல்லாசமாய்ச் சென்று திரும்பலாம். கடல் அலைகளினூடே களைப்படையும் வரை குளிக்கலாம். கரை-ஏறிய தும் அவளைத் துரத்திப் பிடித்து விளையாடலாம். மூச்சிரைக்கத் திணறி இனி ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியாது என்கிற நிலையில் மணலில் விழ லாம். முத்து முத்தாக அவள் உடலில் தங்கி யிருக்கும் நீரைச் சூரியக் கிரணங்கள் உறிஞ்சிச் சுவைப்பதைப் பார்த்து விட்டு, 'உன் உடலில் பட் டதும் உப்பு நீருக்கும் ருசி உண்டாகி விடும் போலும்!' என்று புகழலாம். இரவு அவள் கையால் சமைத்துச் சாப்பிட்ட பிறகு, கடற் கரையோரம் அவளை அமர்த்திருந்து பாடச் சொல்லிவிட்டு மெல்ல அவள் மடியில் தலையைச் சாய்க்க லாம். மாலையில் நீரில் குளித்த வர்கள் இரவில் நிலவில் குளிக் கலாம்!

ஆனால் அதையெல்லாம் கற் பனை செய்து பயன் என்ன? அவள் இப்போது எங்கே வாடுகிறாளோ என்னமோ? என்னை இங்கே இந்த ஏகாந்தத் தீவில் சிறை வைத்திருப்பது

போலவே அவனையும் எங்கேயாவது அடைத்து வைத்திருப்பார்களா? அல்லது என்னை அபகரித்ததே போதும் என்று அவனை அமெரிக்கா திரும்பவே அனுமதித்திருப்பார்களா?

நடந்ததையெல்லாம் நினைக்க நினைக்க ஒரு சொப்பனம் போலிருந்தது. ஆனால் அவனது தற்போதைய ஜாகைக்கு வெளியே இரு சீனர்கள் துப்பாக்கியுடன் காவல் இருப்பதும் மேஜை மீது விண்வெளித்துறை சம்பந்தமான சில கேள்விகள் தனது பார்வைக்கும் பதிலுக்கும் காத்திருப்பதும் இதெல்லாம் கனவல்ல என்று மெய்ப்பித்துக் கொண்டிருந்தன.

எவ்வளவு துரிதமாகக் காரியங்கள் நிகழ்ந்து விட்டன! முகத்தைப் பாதி மறைத்துத் துணி கட்டிக் கொண்டிருந்தவர்கள் ஜீப்பிலிருந்து துப்பாக்கியைக் காட்டியபடி கீழிறங்கி வந்ததுமே டாக்ஸி டிரைவர் பரபரக்கக் காரை விட்டு இறங்கி உளறியடித்து கொண்டு ஓட யத்தனித்தான். ஒரே எட்டில் அவனை நெருங்கிக் காலை நீட்டி இடறி விழச் செய்தான் முகமூடி மனிதர்களுள் ஒருவன். அடுத்து அவன் வாயில் துணி அடைத்துக் கட்டப்பட்டது. அத்துடன் கை கால்களையும் பின்னால் மடக்கி வைத்து மணிக் கயிற்றால் இணைத்து இறுகக் கட்டினார்கள். இதே நேரத்தில் ஒருவன் அனுபமாவைத் துப்பாக்கி முனையில் மிரட்டி ஜீப்பில் ஏறுமாறு உத்தரவிட்டான். வேறு இருவர் மைக்கேலை டாக்ஸிக்குள் திரும்ப ஏறுமாறு பணித்தார்கள். போராட முயன்ற அவனை இருவரும் வினாடிப் போதில் செயலிழக்கச் செய்தார்கள். தன்னைப் பெரும் பலசாலி என்றோ, மல்யுத்த நுணுக்கங்களை அறிந்தவனென்றோ கருத மைக்கேல் தயாராயில்லை. முரண்டு பண்ணுவது மதியீனம் என்று அவன் உணர்ந்த அதே சமயம், 'அனுபமாவுக்குத் தீங்கு ஏதும் நேரக்கூடாது என்றால் எங்களுடன் நீ ஒத்துழைப்பதே நல்லது' என்ற மிரட்டல் வேறு சேர்ந்து கொண்டது. அவன் அடங்கிப்போனான்.

டாக்ஸி டிரைவரைக் காலைப் பொழுதில் யாராவது கண்டெடுக்க வசதியாகச் சாலையோரமிருந்த புதர்களுக்குப்



பின்னால் கொண்டு போட்டார்கள். பிறகு ஜீப்பைத் தொடர்ந்தது கார். நெடுஞ்சாலையை விட்டு விலகிக் கரடு முரடான காட்டு வழியில் சற்றுத் தூரம் போனதும் இரு வண்டிகளும் நின்றன. கும்மிருட்டுச் சூழ்ந்திருந்த போதிலும் சில அடிகள் எடுத்து வைத்ததுமே மணல் பரப்பில் நடக்கிறோம் என்பது புரிந்து போயிற்று மைக்கேலுக்கு.

அலை ஓசையும் அருகில் கேட்டது. அங்கே இரு தோணிகளும் அவற்றைச் செலுத்த முகமூடி அணிந்த ஆட்களும் தயாராயிருந்தனர். படகுகளைப் பெரிய அலையாக வந்தபோது கடலுக்குள் தள்ளி விட்டு அனுபமாவையும் மைக்கேலையும் வெவ்வேறு கலங்களில் ஏறிக் கொள்ளச் சொன்னார்கள்.

''அனு, தைரியமாக இரு'' என்று கூறுவதற்கு அதிகமாக மைக்கேலுக்கு ஏதும் சொல்லத் தெரியவில்லை. உரக்கப் பேசுவதற்கு அவர்களைக் கைதாக்கிக் கொண்டு போனவர்கள் அனுமதிக்கவும் இல்லை. சற்றுத் தூரம் போனதும் நீரில் இரண்டு விமானங்கள் மிதப்பது நட்சத்திர ஒளியில் இலேசாகத் தெரிந்தது. நீரில் இறங்கி ஏறும் ஆற்றல் படைத்த 'ஸீ ப்ளேன்கள்'. இருவரும் இரு விமானங்களில் தனித் தனியே ஏற்றப்பட்டனர்.

''என்ன நடக்கிறது? என்னை எங்கே, எதற்காக அழைத்துப் போகிறீர்கள்?'' என்று மைக்கேல் கேட்டதற்குக் கிடைத்த பதில்: ''ஷட் அப்!''

விமானம் கிளம்பிப் பத்து நிமிஷங்களுக்கெல்லாம் ஒருவன் கையில் இரு 'ட்ரிங்க்'குகளுடன் வந்தான். ஒரு கிளாஸை மைக்கேலிடம் நீட்டி ''குடி'' என்றான். முகத்தை மூடிய துணிக்கு மேலே அவன் கண்கள் அனுதாபத்தைச் சிறிதும் வெளியிடாமல் மிரட்டவே செய்தன.

மைக்கேல் யோசித்தான். 'என்னை ஏதோ ஒரு காரணத்துக்காகக் கடத்திக்கொண்டு போகிறவர்கள் நிச்சயமாகச் சாக அடித்து விட மாட்டார்கள்.



அதிகபட்சம் இதில் தூக்க மாத்திரை கலந்திருக்கலாம். எந்தத் திசையில் எவ்வளவு நேரம் பறக்கிறோம் என்பது போன்ற விவரங்களை நான் ஊகிப்ப தற்குக்கூட இடம் வைக்கக் கூடாது என்பது இவர்கள் நோக்கமா யிருக் கும். நான் தூங்கும்போது என் கைக் கடிகாரத்தைக் கழற்றிக் கொண்டு விடுவார்கள்.

'எனக்கோ தாகமாக இருக்கிறது. இதைச் சாப்பிட்டு வைத்தால் என்ன? அனுபமாவைப் பற்றிக் கவலைப்பட்டுத் துயரடைவதையாவது ஆழ்ந்த நித் திரை தவிர்க்கட்டுமே!'

எதிரே இருந்தவன் முகவாய்க்குக்கீழ் தொங்கிய கைக்குட்டை முனையைச் சற்று உயர்த்தி மடித்து மதுவை அருந்து வதைக் கண்டான் மைக்கேல். அவனைத் தானும் பின்பற்றினான்.

மைக்கேல் கண் விழித்தபோது இப் போதைய அவன் இருப்பிடமான இந்த வீட்டில் படுக்கை அறையில் அகன்றதொரு கட்டிலில் தான் கிடத் தப்பட்டிருப்பதை உணர்ந்தான். கண் களைக் கசக்கிக் கொண்டு அவன் வாச லறைக்கு வந்தபோது அங்கே ராணுவ உடையில் காணப்பட்ட சீனர்கள் சிலர் சிகரெட் பிடித்தபடி அமர்ந்திருந்தனர்.

''நான் எங்கே இருக்கிறேன்?'' என் ருன். அவர்களில் ஒருவன் மொழி பெயர்ப்பாளன். சீன மொழியில் அவன் அந்தக் கேள்வியைப் போட்டுக் கிடைத்த பதிலை ஆங்கிலத்தில் சொன்னான்:

''ஹாய்பாங் வளைகுடாவில் செஞ் சீனக் கடற்கரையோரமாக ஒரு சிறு தீவில் நீ இருக்கிறாய். உன்னை இந்தியா விலிருந்து கடத்திக் கொண்டு வர அங்குள்ள எங்களது நக்ஸலைட்டு ஐந் தாம்படை நண்பர்கள் உதவினர். அவர் களைத் திருப்பி அனுப்பி விட்டோம். இப்போது நீ எங்களுடைய கைதி.''

''என்னிடமிருந்து என்ன எதிர்பார்க் கிறீர்கள்?''

அவர்களில் ஒருவன் கற்றைத் தாள் களை ஒரு தோல் பையிலிருந்து எடுத் தான். ''இதை இங்கே வைத்துவிட்டுப் போகிறோம். இதில் சில கேள்விகள் உள் ளன. அவற்றுக்கு எங்களுக்குப் பதில் தேவை. ஆங்கிலத்திலேயே நீ எழுத லாம். எங்கள் விஞ்ஞானிகள் புரிந்து கொள்வார்கள்.''

''எதைப் பற்றிய கேள்விகள்? விண் வெளி விஞ்ஞானம் குறித்தா?''

''ஆமாம்.''

''ஆனால் உங்களிடம்தான் நாடு விட்டு நாடு பாயும் ஏவுகணைகள் பல ஏற்கனவே உள்ளனவே? செயற்கைச் சந்திரனையும் உலவ விட்டிருக்கிறீர் களே! பத்திரிகை படிக்கும் எவருக்கும் தெரிந்ததுதானே இது?''

''உண்மை. நாங்கள் பல ஏவுகணை களைச் சோதித்திருக்கிறோம். ஆனால் அவற்றில் நாங்கள் முழுத் திருப்தி பெறவில்லை. இன்னும் அதிகமான முன்னேற்றம் காண விரும்புகிறோம். நவீனப்படுத்த ஆசைப்படுகிறோம். அமெ ரிக்காவில் 1960ம் மாடல் காருக்கும் 1974ம் மாடல் காருக்கும் வித்தியாசம் இல்லையா?''

மைக்கேல் ஏளனமாகச் சிரித்தான். ''நல்ல உபமானம்தான். ஆனால் 1974 மாடல் ராக்கெட்டை நீங்கள் உருவாக்க நான் உதவுவேன் என்று எதிர்பார்க் கிறீர்களே அதுதான் முட்டாள்தனம்!''

''உன் பேச்சுத்தான் அசட்டுத்தன மாய் இருக்கிறது. எங்கள் விருப்பத் துக்கு இணங்க மறுத்தால். உன் காதலி அனுபமா பலவிதமான சித்திர வதைகளுக்கு உள்ளாவாள் என்பது கூடவா உனக்குப் புரியவில்லை?''

மைக்கேல் பற்களை நறநறவென்று கடித்தான். ''நாசமாய்ப் போக! மனி தர்களா நீங்கள்? பிசாசுகள்!''

அவர்கள் கலங்கவில்லை; கோபப்பட வில்லை. சாந்தமாகப் பேசினான் தலை வன்: ''நீ ஆரம்பத்தில் இப்படித்தான் ஆத்திரப்படுவாய். நாங்கள் எதிர் பார்த்ததுதான். அமைதியாய் இருந்து யோசித்தால் உன் மனம் மாறும். நாங்கள் வருகிறோம். மறுபடியும் நாளை சந்திப்போம்.''

அவர்கள் எழுந்து நடந்தார்கள். வீட்டிலிருந்து சற்றுத் தொலைவில் தோணித் துறை. அங்கு ஒரு விசைப் படகில் ஏறிச் சில விநாடிகளில் கண் ணுக்குத் தெரியாமல் மறைந்தார்கள்.

## 47. தப்புவதற்கு வழி

அந்த அறைக்குள்ளேயே மைக்கேல் குறுக்கும் நெடுக்குமாக அலைந்தான். எஃப். பி. ஐ. ஊகித்து எச்சரித்தது எல்லாம் சரியாகி விட்டது. ஒரே ஒரு வித்தியாசம். தன்னை இங்கு கடத்திக் கொண்டு வந்தவர்கள் இந்தியர்களோ அல்லது பாகிஸ்தானியர்களோ அல்ல. செஞ்சீனர்கள். இதை எண்ணியபோது அனுபமா மீது எஃப். பி. ஐ. அனுவசிய மாகச் சந்தேகப்பட்டது எவ்வளவு

கம்ப்யூட்டரை மிஞ்சும் ஸிஸிஎம்



# நியூ மிர்ராபோ

## சித்திரக் கோலத்திலே சிங்காரப் பதுமை!



இன்று கம்ப்யூட்டர் அளிக்கும் சித்திரக் கோலங்கள். வியப்பூட்டும் புதுமைகள். கற்பனையைக் கடக்கும் எழில் படைப்புகள். ஸிஸிஎம் நியூ மிர்ராபோ ஃபுல் வாயில் புடவைகளும் அப்படியே. மெல்லிடையாள் மனங்கவரும் புதையல்கள். உயர்தர எகிப்திய பருத்தியில் தயாரிக்கப்பட்டவை. 'ஆன்டிகிரஸ்' செய்யப்பட்டவை. இதற்கு ஏற்ற ஃபுல் வாயில் சோளித்துணிகள்.

இதர படைப்புகள்:

எலிகன்ஸா சூட்டிங் • லவ்லின் ஷர்ட்டிங்

பிசகு என்று தோன்றியது. ஏன், என் உள்ளத்தில் கூடச் சில சமயங்களில் அவள்மீது ஐயப்பாடு தோன்றவில்லையா? எப்பேர்ப்பட்ட துஷ்டன் நான்?

'அனு துரோகியல்ல' என்பது மனத்துக்கு உறுதியானதும் மைக்கேலுக்கு எழுந்த மகிழ்ச்சி கட்டுக்கடங்காத அளவில் இருந்தது. ஆயின் அது அதிக நேரம் நீடிக்கவில்லை. அவள் இப்போது எந்தச் சீனச் சிறைச்சாலையில் எந்த விதமான துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறாளோ என்று எண்ணிய போது வேதனை நெஞ்சை முறுக்கிப் பிழிந்தது. எஃப். பி. ஐ. அதிகாரியின் யோசனையைக் கேளாமல் என்னை அபாயத்துக்கு உள்ளாக்கிக் கொண்டதுடன் அனுபமாவையும் அல்லவா ஆபத்தில் இழுத்து விட்டு விட்டேன் என்று நினைத்து உருகினான்.

சீனர்கள் மேஜை மீது விட்டுச் சென்றிருந்த தாள்கள் மீது அவன் பார்வை விழுந்தது. அதைக் கையால் தொடாது போனாலும் ஓரிரு கேள்விகளைப் படிக்க முடிந்தது. இருந்த இடத்திலிருந்த படியே. அவனுடைய தேர்ந்த ஞானத்துக்கு அப்பாற்பட்ட விஷயம் எதுவுமில்லைதான். அருவருப்புடன் அவன்





### 'பைப்' பிரியர்களுக்கு...

இப்பொழுது இருக்கும் சிகரெட் லைட்டர்களால் பைப் பற்றவைப்பது கடினம். ஆகவே ஒரு பைப்-லைட்டர் இப்பொழுது இங்கிலாந்தில் பிரபலமாகி இருக்கிறது. இதில் 'தீ பக்கவாட்டில் வெளிவரும்.

டிட்பிட்ஸ் - பாலி

---

புகுந்து சிறு சிறு தீவுகளை உண்டாக்கி யிருக்கும் இயற்கையின் புள்ளிக்கோலம்?

ஏன், சீனாவில் இத்தகைய பிரதேசம் இருக்கக் கூடாதா என்ன? ஹாய்பாங் வளைகுடா கடக ரேகைக்குக் கீழே தானே இருக்கிறது! உஷ்ணப் பிர தேசம்தானே?

ஒருவேளை இது எல்லாமே ஒரு நாடக மாயிருக்குமோ? இந்தச் சீனர்கள் நடி கர்கள் என்றால் இந்த வீடும் தீவும்தாம் அரங்கமோ? அப்படியானால் நடிப்பும் முதல் தரம்தான்; அரங்க நிர்மாண மும் அற்புதம்தான். ஒரு சிறு குறை கண்டுபிடிக்க முடியாது!

நாடகம் என்றே கொள்வோமானால் இவர்கள் யார்? இந்தியாவுக்காக உழைப்பவர்களா? அல்லது பாகிஸ்தா னுக்காகவா? சிந்திக்கச் சிந்திக்க மூளை குழம்பியது மைக்கேலுக்கு.

அடுத்த நாள் காலை சூரியோதயமா கிச் சிறிது நேரத்துக்கெல்லாம் விசைப் படகு வரும் ஒலி கேட்டது. முதல் நாள் வந்த அதே சீனர்கள்.

''என்ன முடிவு செய்தாய்?''

''நான் எந்த முடிவுக்கும் இன்னும் வரவில்லை'' என்றான் மைக்கேல்.

''அதுவே ஒரு முன்னேற்றம்தான்''

அந்தப் பேசாமடந்தைக் காவலர்களைப் பிரமை பிடித்தாற்போல் பார்ப்பது தவிர வேறு ஒன்றும் செய்ய முடியாத நிலையில் தனக்கு நிச்சயம் பைத்தியம் பிடித்துவிடும் என்று நினைத்தான். படிப் பதற்கு ஒரு புத்தகம், பிடிப்பதற்கு ஒரு சிகரெட், அருந்துவதற்குச் சிறிதளவு மது, விளையாட ஒரு சீட்டுக் கட்டு என்று எதுவுமே இல்லாதபோது எப் படிப் பொழுதைப் போக்குவது? அவன் கோபத்தில் கேசத்தைப் பிய்த்துக் கொண்டான். சித்திரவதைக் கலையில் சீனர்கள் மன்னர்கள் என்பார்களே எவ் வளவு உண்மை!

மாலை மயங்கிக் கொண்டிருந்தது. 'கடல் நீரில் இறங்கி நீந்தித் தப்பிச் சென்று விட்டால் என்ன?' என்று ஒரு யோசனை எழுந்தது. எவ்வளவு தூரம் நீந்துவது? அதோ வெகு தொலைவில் தெரியும் அந்த மற்றொரு தீவை அடையு முன்னர் கை சளைத்து நாம் மூழ்கிச் செத்து விட்டால்...? ரொம்ப நல்லதாய்ப் போயிற்று! பைத்தியம் பிடித்து அலைவது அல்லது தேசத் துரோகியாக மாறுவதை விட அது எவ் வளவோ மேல்!

இந்த எண்ணம் ஏற்பட்டதும் சட் டென்று மைக்கேலுக்கு எஃப். பி. ஐ. அதிகாரி பாரிஸில் தன்னிடம் தந்த இரு ஸயனைட் மாத்திரைகளின் நினைவு வந் தது. படுக்கை அறைக்கு விரைந்து அங்கே தான் கழற்றிப் போட்டிருந்த இடுப்புப் பெல்ட்டின் உட்புறத்தை விரல்களால் தடவிப் பார்த்தான். நல்ல வேளை! பெல்டின் உள் மடிப்பில் மறைவாக வைத்துத் தைக்கப் பட் டிருந்த அந்தச் சிறிய பெட்டி இன் னும் இருந்தது. சீனர்களின் கண் களில் அது படவில்லை. மாத்திரை களை ஒன்றை அபயபாலிடம் தரலாம்

# மோகம்

**நல்ல படங்களை விமரிசிக்கலாம்; சில மோசமான படங்களை விமரிசிக்காமலே விட்டு விடலாம். ஆனால் கண்டனத்துக்குரிய படத்தைக் கண்டிக்காமல் விடலாமா?**

தாய்மையை நாடும் மனைவி; ஆண்மையை இழந்த கணவன். இவர்கள் வாழ்க்கை எப்படி இருக்கும்? ஆர். பி. புரொடக்ஷன்ஸாரின் ''மோகம்'' ''ரண்டார்கை''எழுதி டைரக்ட் செய்தது.

கணவன் மீது அளவு கடந்த காதல் கொண்ட மனைவிதான். கணவனும் மனைவி மீது அளவு கடந்த பாசமும் பரிவும் கொண்டவன்தான். ஆனால் பாவம் அவன் உடற்பசியைத் தணிக்க முடியாத, அவளது தாய்மை விருப்பத்தைப் பூர்த்தி செய்ய முடியாத நிலையில் நின்று தவிக்கும் கணவனின் சித்திரம் உள்ளத்தைத் தொடுகிறது. கணவனது அசக்தம் மனைவியை ஸ்திரீலோலனை ஒரு வழக்கறிஞனிடம் தள்ளி விடுகிறது. அந்த வழக்கறிஞனிடம் தன் பெண்மையை இழந்து கருவுறுகிறாள். தாய்மைப் பேற்றுக்காக ஏங்கியவள், கருத்தரித்தவுடன் மகிழ்வதற்குப் பதிலாகச் சொல்லொணாத் துயரமுறுகிறாள். அந்த நிலை மகா மட்டமான ஒரு டாக்டரிடம் இட்டுச் செல்கிறது.

இதில் மேலும் துர்ப்பாக்கியம் என்னவென்றால், தன் மனைவியின் நடத்தை கெட்ட தன்மைக்கு எவன் காரணமோ அவன் மூலமாகவே கணவன் முழு விவரமும் கேட்டுத் துயருற வேண்டிய நிலை. அந்த வெட்கக்கேட்டைத் தாங்க முடியாமல் அவன் தற்கொலை செய்து கொண்டு மடிவதாகக் கதை முடிகிறது.

இக்கதையில் ஒரு வழக்கறிஞனும், ஒரு டாக்டரும் ஒரு பெண்ணின் கற்பைச் சூறையாடுவது போலவும், சூறையாட முற்படுவது போலவும் காட்சிகள் அமைந்திருக்கின்றன. இது வழக்கறிஞர் தொழிலுக்கும் வைத்தியத் தொழிலுக்கும் இழுக்குக் கற்பிப்பதாகும். தினம் நூற்றுக் கணக்கான ஆடவர் பெண்டிருடன் பழக வேண்டிய நிலையிலுள்ள வழக்கறிஞர்களும் டாக்டர்களும் கயவர்கள் என்ற எண்ணத்தைச் சினிமாப் பார்க்கும் பாமர மக்கள் மனத்தில் விதைக்கக் கூடாது.

குடித்துவிட்டுப் போதை நிலையில் இருந்த போது, கணவன் ஆண்மை பெற்றிருந்ததாகக் கதை முடிவில் கதாநாயகி சொல்லும் கருத்துக்கு விஞ்ஞான ரீதியாக ஆதாரம் கிடையாது என்பதோடு குடிப் பழக்கத்துக்கு அந்த ஓர் ஆற்றலைக் கற்பித்து வக்காலத்து வாங்குவது போலிருக்கிறது. பரிதாபம்!

மனத்துக்கு நிறைவு தராத இப்படத்தில் கதாநாயகியாகத் தோன்றும் ஸ்ரீலேகாவின் நடிப்பு நன்றாக இருப்பதனால் தலையிலடித்துக் கொள்ளாமல் தப்புகிறோம்! —எஸ்.வி.எஸ்.





**முகவெட்டு !**

பாஸ்டனைச் சேர்ந்த டாக்டர் மெஸ்கோம் கூறுகிறார்: 'ஒரு மனிதன் ஐம்பத்தைந்து வயது அடைவதற்குள் 3350 மணி நேரம் அதாவது 470 வேலை நாட்களை 'ஷேவிங்' செய்வதில் செலவழித்திருப்பான்!'

இப்படி மூன்று மாதங்கள் மூன்று ஊசி போட்டு மருந்து கொடுத்தபின் ஓர் ஆண்டு கழித்து இந்தத் தடுப்பு மருந்துகளை ஒரே மூச்சில் அளிப்பதும், நான்கு வயதில் மற்றொரு முறை கொடுப்பதும் இன்னும் நல்லது என்கிறார்கள். பள்ளி சேரும் பருவத்தில் தொற்று நோய்த் தொல்லையில் சிக்காமல் இருக்க இவையே துணை.

இந்தத் தடுப்பு மருந்துகள் விலை அதிகம் இல்லாதவை. ஆனால் ஆரோக்கிய நோக்கில் மதிப்பு உயர்ந்தவை. பல பிரசவ மருத்துவ மனைகளில் தடுப்பு ஊசிகள் எல்லாக் குழந்தைகளுக்கும் சகாயக் கட்டணத்தில் போடப்படுகின்றன.

இப்போதெல்லாம் குழந்தை பிறந்த நான்காம் நாளே மருத்துவ மனைகளில் அம்மைத் தடுப்பு ஊசி குத்துவது சகஜம். எவ்வளவு விரைவில் தடுப்பு ஊசி போட்டாலும் தவறில்லையாம்.

'பிறந்த குழந்தைக்கு என்ன தெரியும்?' என்று நினைக்க வேண்டாம். விவரித்துச் சொல்ல முடியாத ஒரு நுட்ப உணர்வு எல்லாக் குழந்தைக்கும் உண்டு. தலையைப் புரட்டும் அளவுகூட வளராத குழந்தை காலடிச் சத்தத்திலிருந்தே தன் தாயை அறிகிறது. அறிந்த ஆனந்தம் கண்ணிலே தெரிகிறது! தனக்குத்தான் பால் கரைக்கிறாள் என்பதை வழக்கமான பாத்திர — கரண்டி ஓசையில் உணர்ந்துவிடுகிறது! எல்லா உயிர் இனங்களுக்கும் இயல்பான 'தற்காப்பு' உணர்ச்சி மனிதக் குழந்தைக்கும் இருக்கிறது. வேற்று முகம் கண்டு அழுகிறது. தனக்கு ஒன்றும் நேராது, தற்காப்பு இருக்கிறது என்ற நிலை அறிந்து அமைதி அடையத் தெரிகிறது.

ஒலி பேதங்களை உணரும் முதல் மாதங்களிலே குழந்தை 'கேள்வி — ஞானம்' பெறுகிறது. இந்த உணர்வில் குறை இருக்கும் குழந்தைகளில் பலர் பேச வாய்ப்பில்லாமல் ஊமையாக வளர்கின்றனர். தொடக்கத்திலேயே கவனித்தால் கேட்கும் உணர்வைப் பெருக்கத்தகுந்த கருவிகளைக் கொண்டு உதவலாம்.

பேச்சு வருமுன்னரே பேச்சைப் புரிந்து கொள்கிறது குழந்தை. சொல்வதைத் திருப்பிச் சொல்வதில் அலுப்பு இல்லாமல் சலிப்பு இல்லாமல், விளையாட்டாகவே வித்தை கற்கிறது. முதல் ஆண்டில் தொடங்கும் மழலை இரண்டாவது பிறந்த நாள் சமயத்தில் நன்கு வேகம் ஆற்றலாக வளர்ச்சி பெறுகிறது. நல்ல கதைகளைச் சொல்லும் பெற்றோர்களை உடைய குழந்தைகள் விரைவில் பேசத் தொடங்குகின்றன. அவற்றின் மனமும் ஆரோக்கிய வளர்ச்சி பெறுகிறது.

மூன்று வயதில் நூறு சொற்களை மட்டும் கற்று வைத்துக் கொண்டு தினம் இருநூறு கேள்வி கேட்கும்போது பெற்றோருக்குச் சந்தோஷமாகவும் இருக்கிறது. சங்கடமாகவும் இருக்கிறது. என்றாலும், ''பேசாதே'' என்று சின்னஞ் சிறு குழந்தைகளை எப்போதும் கட்டுப்படுத்த வேண்டாம். குழந்தை தனக்குத் தானே பேசிக் கொள்வதும்கூட ஒரு வகை மன வளர்ச்சிதான். குழந்தை காதில் கேட்டதையெல்லாம் சொல்வது இயல்பு. ''இது கெட்ட வார்த்தை சொல்லாதே'' என்று அடக்குவதைவிட, ''இது கேட்க நன்றாக இல்லையே'' என்று மெல்லத் தடுப்பதே விவேகம்.

பேச்சிலும் சரி, தவழ்வது, அமர்வது, நிற்பது, நடப்பது போன்ற வளர்ச்சி அடையாளங்களிலும் சரி ஒவ்வொரு குழந்தையும் ஒரு மாதிரி முன்னேற்றம் காட்டும். குழந்தையை மற்றொன்றுடன் ஒப்பிட்டுவிட்டால் இள மனத்தில் விகாரம் தோன்றிவிடும். முன்னேற்ற வேகம் குறைவானால் கவலைப்பட வேண்டாம். அதிக மந்தமாக இருந்தால் தான் ஏதோ ஆரோக்கியக் கோளாறோ என்று சந்தேகப்பட்டு வைத்திய உதவி நாட வேண்டும். உதாரணமாக இரண்டு வயது நிறைந்த பிறகுகூட ஒரு குழந்தை பேசத் தொடங்காவிட்டால் எங்கோ ஏதோ சரியில்லை என்று அர்த்தம்.

குழந்தை உள்ளம் இயங்கும் வேகம் பிரமிக்க வைப்பது. அதன் கற்பனைகள் அற்புதமானவை என்றால் அதற்கு ஏற்படும் சந்தேகங்கள் கணக்கில் அடங்காதவை. தோன்



**பிறக்கும் போதே சரித்திரம் சமைத்தது இந்தக் குழந்தை!**

அமி பிறப்பதற்கு நான்கு மாதங்கள் முன்பாகவே அவள் இதயத் துடிப்பு வேகம் குறைவாக இருப்பதை உணர்ந்தார் டாக்டர். இதய நிபுணர்களை எச்சரித்து வைத்தார்.

பிறந்தவுடன் விசேஷ கவனம் பெற்றாள் அமி. ஐந்து நாட்களுக்குப் பிறகு நெஞ்சிலே சிறிய கருவியைப் பொருத்தினர். இக் கருவி இதயத் துடிப்பைத் தேவையான அளவில் ஒரே சீராக வைத்திருக்கும். இதன் மேற்பார்வையின் கீழ் அமி தீர்க்காயுடன் வாழ்வாள்.

னும் பிரச்னைகளோ குழந்தைகளுக்கு மலைப்பானவை. பரிவோடும் நட்போடும் அவர்களிடம் பேசிப் பழகுதலே நல்ல குழந்தை வளர்ப்பு ஆகும். குழந்தையுடன் பழக நேரமில்லாமல் விலை உயர்ந்த பண்டங்களை வாங்கித் தருவதுடன் திருப்தி அடையும் செல்வந்தரைவிட, எளிய ஒலை கிலுகிலுப்பையைக் குழந்தைக்கு அளித்து அதனுடன் கொஞ்சி விளையாடிக் கதை சொல்ல நேரம் ஒதுக்கும் சாமானியனே நல்ல தந்தையாவார்.

தனிமையிலும் பிற குழந்தைகளுடன் விளையாடுகையிலும் தாம் கண்டதையும் கேட்டதையும் வைத்து நடித்தபடி இருப்பார்கள் சிறுவர், சிறுமியர். ஒரு நிமிஷம் அப்பாவாகவும், அடுத்த நிமிஷம் டாக்டராகவும், சற்று நேரம் பொறுத்துக் கார் ஓட்டியாகவும் பிறகு கண்டக்டராகவும் கற்பனையில் வாழும் குழந்தை. இந்த விளையாட்டுக்கள் மன வளர்ச்சிக்கு உதவுவன; உடல் வளர்ச்சிக்கும் தேவை.

குழந்தை நோயுறும்போது உடலுக்கும் உள்ளத்துக்கும் சேர்ந்தே சிகிச்சை நடைபெறுகிறது. மருந்து மட்டும் குழந்தையின் நோயைக் குணப்படுத்தப் போதாது. தாயின் அன்பும் ஆதரவும் பரிவான கவனிப்பும், சேர்ந்தே நோயையும் குழந்தையையும் மொத்தமாகக் குணப்படுத்துகின்றன.

நோய் என்னும்போது குழந்தைகளின் கொடிய விரோதியான ஈரல் கட்டியைக் குறிப்பிட வேண்டும். சிகிச்சையே இல்லை என்று கருதப்பட்ட இந்த நோய் பற்றிக் கடந்த இருபது ஆண்டுகளுக்கு மேலாகச் சென்னை குழந்தை மருத்துவ நிபுணர்கள் ஆராய்ந்து வந்துள்ளனர். சில குடும்பத்துக் குழந்தைகளை அடுத்தடுத்து இந்த நோய் பற்றக் காரணம் ஒரு வகைக் காமாலை வைரஸ் கிருமியே என்று கருதுகிறார்கள்.

நோயுற்ற ஈரலை இப்போது நீண்ட காலச் சிகிச்சை அளித்து, நோய் அடையாளமே முற்றிலும் நீக்கிக் குணப்படுத்த முடிகிறது.

காசம் அதிகம் பரவியுள்ள நமது நாட்டில் குழந்தைகளைச் சோதித்தால் ஐந்தில் ஒரு குழந்தைக்கு ஓரளவு காச நோய் அடையாளம் இருக்கக் காணலாம். சில குழந்தைகள் இதனால் அதிகம் பாதிக்கப்படுவதில்லை. ஆனால் சிலவற்றுக்கு நோய் பற்றுவதும் முற்றுவதும் விரைவில் நேர்ந்துவிடுகிறது. பெரியவர்கள் போல் கபமும் இருமலும் நோய் அடையாளமாக இராமலே காசம் வரக்கூடும். இது இல்லை என்பதை அடிக்கடி சுரம் வரும் போது சோதனையில் பார்த்து உணர்வது நல்லது.

ஆலோசனை: டாக்டர் என். சுந்தரவல்லி
கட்டுரை: தம்பி சீனிவாசன்




## மறக்கலாமா ?

**ப**யண இலக்கிய மன்னர்கள் வரிசையில் ஸ்ரீ பாஸ்கரத் தொண்டைமான் அவர்களை விட்டு விட்டீர்களே!



வேங்கடம் முதல் குமரி வரை மட்டுமின்றி வேங்கடத்துக்கு அப்பாலும் போய்ப் பல்வேறு ஸ்தலங்களைப் பற்றிக் கல்கியில் தொடர்ந்து பல ஆண்டுகள் எழுதி வந்தவராயிற்றே! எப்படி மறந்தீர்கள்?

சென்னை-20
20-6-74

வி. கோபாலன்

(இப்படி ஒரு விசேஷக் குறிப்புடன் தனியிடம் பெற்றுப் பிரசுரமாக வேண்டும் அவர் படம் என்பதற்காகத்தான்! - ஆர்.)

## முக்கொம்பும் புளியஞ்சோலையும்

**க**ல்கி சுற்றுலா சிறப்பிதழ் கண்டேன்.

காவேரிக் கரையில் அகண்ட காவேரி, காவேரி, கொள்ளிடம் என்று மூன்றாகப் பிரியும் இடத்தில் முக்கொம்பு உள்ளது. தை, ஆடியில் பல இடங்களிலிருந்தும் நீராட வருவோர் தொகை பல ஆயிரம். 1836ல் கட்டப்பட்ட மேலணை அறுபதாயிரம் ஏக்கர்கள் பாசனம் பெறவைக்கிறது.

கொல்லி மலையின் அடிவாரமே புளியஞ்சோலை. விழும் நீர்வீழ்ச்சி ஆகாசக் கங்கை. ஆண்டு முழுவதும் அருவி கொட்டுகிறது. அடிவாரத்தில் உயர்ந்த மரங்கள், சோலைகள் ஒன்றை ஒன்று கொஞ்சிக் கிடக்கும் அழகே அழகு. மலையில் இருக்கும் அறப்பளீசுவரர் கோயில், ஆகாச கங்கை ஆகியன காணப் பன்னிரண்டு கிலோமீட்டர் போக நல்ல ரோடு இல்லை. போட்டுக் கொண்டிருக்கிறார்கள். மலைவாழ் மக்களை 'மலையாளி' என்பர். தேவையான சாமான்களை வாங்கிப் போகப் புளியஞ்சோலைக்கு வரும் மலையாளிகள், சுத்தமான தேன், கனிகள் கொண்டு வரத் தவறுவதே இல்லை.

இயற்கை கொஞ்சும் சுற்றுலா இடங்கள் இவை. அருமையான 'பிக்னிக் ஸ்பாட்ஸ்'.

திருச்சி — 3
21—6—74

மனசை சீரன்.

## பூக்கடைக்கு விளம்பரம்

சுற்றுலா சிறப்பிதழ் கண்டேன்.

இந்தியச் சுற்றுலா காரியாலயம் பற்றிய சில தகவல்கள் தருகிறேன். காலையிலிருந்து மாலை வரை சுற்றுலாப் பயணிகள் ஒரு நாளைக்கு எழுபது பேர் வந்து சுற்றுலாவிவரங்களைக் கேட்டறிந்து போவதோடு, எங்களிடம் 'பயணத் திட்டம்' வகுத்துக் கொண்டு செல்கின்றனர். இவர்களில் இருபது பேருக்கு மேல் அயல் நாடுகளைச் சேர்ந்தவர்களாயிருக்கிறார்கள்.

சுற்றுலாப் பயணிகளைக் கவர்ந்திழுக்க அயல் நாடுகளில் நம்முடைய பதினாறு காரியாலயங்கள் உள்ளன. நாம் செய்துள்ள புதுமையான ஏற்பாடுகளில் ஒன்று Hospitality Scheme. சுற்றுலா இலாகா அயல் நாடுகளில் தலைசிறந்த பத்திரிகைகளில் பணியாற்றுபவர்களில் ஒருசிலரை இரண்டு வார விடுமுறைத் திட்டத்தில் இலவசமாக இந்தியாவுக்கு அழைத்து வருகிறது. இந்தியாவின் தலைசிறந்த ஹோட்டல்களில் தங்க வைத்து, இந்தியாவின் புகழ்பெற்ற இடங்களைக் காண வைக்கிறது. அயல் நாடு திரும்பியதும் அவர்களது பிரயாணக் கட்டுரைகள் பிரபல பத்திரிகைகளில் இடம் பெறுவதால் அயல் நாட்டுப் பிரயாணிகளைக் கவர வாய்ப்பு ஏற்படுகிறது.

சமீபத்தில் ஜப்பானில் பல பத்திரிகைகளின் பிரதிநிதிகளாக வந்த எழுத்தாளர்களுக்காக 15,000 ரூபாய் செலவிட்டோம். இதன் வாயிலாகச் சுற்றுலாவுக்குக் கிடைத்த வருவாய் 2,57,666 ரூபாய்.

ஸ்ரீமதி தேவிகா நாயர்
உதவி டைரக்டர், சென்னை சுற்றுலா காரியாலயம்




குற்றாலத்து அருவியும்
நீலகிரி ஏரியும்
டால் படகு வீடும்
பிகினி உடையும்

கொண்ட படங்கள் சேர்க்கிறேன்
குளிர்ந்த நினைவாய்க் குவிக்கிறேன்.

'லோயர் மிடில் கிளாஸ்', இல்லை
'அப்பர் புவர் கிளாஸ்' நான்.
வேறென்ன செய்வேன்?
ஊட்டிக்கா போவேன்? - அ. ஆசிர்வாதம்



சீக்கியர்கள் புகை பிடிப்பதில்லை. அவர்கள் மதக் கோட்பாடுகள் அதற்கு இடம் தருவதில்லை. 9-6-74 இதழ் 'விண்ணும் மண்ணும்' கதையில் சீக்கியர் புகை பிடிப்பதாக எழுதியதுடன் படமும் போடப்பட்டிருந்தது.

பம்பாய் — 50
9—6—74

டி. வி. கனகசபை

[பிழையைச் சுட்டிக் காட்டியதற்கு நன்றி.
— ஆசிரியர்]

# பொழுது போக்கு

பி. எஸ். எம்.

## மூன்றாண்டுப் பயணம்!



நாட்டுப் படகு ஒன்றில் குடும்பத்தோடு ஒருவர் கடல் கடக்கத் துணிந்தார் என்றால் அவரைப் பாராட்டத்தானே வேண்டும்! நியூஸிலாந்தில் உள்ள ஆக்லண்டிலிருந்து 1966ல் புறப்பட்டு மூன்று வருஷங்கள் கழித்து லண்டனை அடைந்தார் அவர். வழி நெடுக அவருக்குப் பல ஆபத்துக்கள், சோதனைகள்! டேவிட் லூயிஸ் தம் மனைவியோடும் இரண்டு குழந்தைகளோடும் குடும்ப நண்பர் பிரிஸில்லாவுடனும் இந்தப் பயங்கரக் கடல் பயணத்தை மேற்கொண்டார். படகோட்டுவதிலுள்ள ஆசை, கடல் பயணம் மீதுள்ள மோகம் அவரை இதற்குத் தூண்டின.



இடது கை பாட்ஸ்மன் லியோனல் டென்னிஸன் ஆஸ்திரேலியாவுக்கும் இங்கிலாந்துக்கும் நடைபெற்ற மூன்றாவது டெஸ்டில் பீல்டிங்கின்போது இடது கையில் அடிபட்டுக் கொண்டுவிட்டார்! அதனால் என்ன? அவர் தமது வலது கையினாலேயே ஆடி ஒரு மணி நேரத்தில் 63 ரன்களை எடுத்தார்!

## பரிசென்ன?

பாபிலோனின் எல்லைப்புறக் காவலன் அந்தக் இரேக்கப் பிரயாணியைத் தடுத்து நிறுத்தி, "எங்கள் மன்னனுக்கு என்ன பரிசுகளைக் கொணர்ந்திருக்கிறாய்?" என்று கேட்டான்!

"எனது நற்குணங்களை!" என்று பதிலளித்தார் அந்தக் இரேக்கர்.

"ஏன் எங்கள் மன்னரிடம் அவை இல்லை என்று நினைக்கிறீர்களா?" என்று கேட்டான் காவலன்.

"அரசனிடம் இருக்கலாம். ஆனால் அவற்றைப் பயன்படுத்தும் வழி அவருக்குத் தெரியவில்லை" என்றார் இரேக்கப் பிரயாணி.



## எமகாதகப் பேச்சாளர்!

ஒரு நிமிஷத்துக்கு 300 வார்த்தைகள் பேசுவது அபூர்வம். ஐஸ் ஹாக்கி நேர்முக வர்ணனை தரும் வில்மெட், ஆட்டத்தின் வேகத்துக்கு ஏற்பப் பேசிப் புகழ் பெற்று விட்டார்! நாய்கள் பந்தயத்தை நேர்முக வர்ணனை செய்த ரேமாண்ட் கிளென் டென்னிஸ் முப்பது விநாடிகளில் 176 வார்த்தைகளைப் பொழிந்து தள்ளி யிருக்கிறார். பொது வாழ்க்கையில் 1961ம் வருஷம் அமெரிக்க ஜனாதிபதி கென்னடி நிமிஷத்துக்கு 327 வார்த்தைகளைக் கொட்டி 'விரைவாகப் பேசும் வல்லுநர்' என்ற புகழை எய்தி யிருக்கிறார்.

"அது சரி. உங்கள் நிருபரை எங்க வீட்டுக்கு அனுப்பி என் மனைவியைப் பேட்டி காணச் சொல்லுங்கள்" என்று யாரோ முணுமுணுப்பது காதில் விழுகிறது!





குறுகியகாலப் போர் நிகழ்ச்சிகளில் வங்க தேச விடுதலைப் போரும் ஒன்றாகக் கருதப்படுகிறது. ஆனால் உலகிலேயே மிகக் குறைந்த நேர யுத்தம் நடந்தது எங்கே தெரியுமா?

இங்கிலாந்துக்கும் ஜான்ஸிபாருக்கும் இடையில் 1896ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 27ந் தேதி 9.02 மணியிலிருந்து 9.40 மணிவரை யுத்தம் நடந்து முடிந்தது. இங்கிலாந்து கப்பல் படை, ஹாரி ஹேரால்ட்ஸ்வொர்த் ராய்ஸன் தலைமையில் ஜான்ஸிபார் சுல்தானை அரண்மனையை விட்டு வெளியேறக் கட்டளை இட்டது. சுல்தான் முரண்டு பிடிக்கவே முப்பத்தெட்டு நிமிஷங்களில் குண்டுகளை வீசிச் சுல்தானை அடிபணிய வைத்து விட்டது. புதிய ஜான்ஸிபார் சுல்தான் தளபதி ராய்ஸனுக்கு 'நட்சத்திர'ப் பரிசு வழங்கிக் கௌரவித்தார்.



## அச்சம் தரும் அருவி !

கோடைக் காலத்தில் அருவியில் ஸ்நானம் செய்யலாமா என்றால் படுகுஷியாகத் தலையாட்டுவீர்கள். ஆனால் உலகத்திலேயே மிக உயரமான அருவி எங்குள்ளது என்றால் விழிப்பீர்கள். வெனிஸுவாலாவில் தேவதை அருவி 3202 அடி உயரத்திலிருந்து விழுகிறது! இந்த அருவி இருப்பதை 1935ம் ஆண்டில் ஒரு விமானத்தில் பறந்தவர்கள் கண்டு பிடித்ததோடு அதன் உயரத்தையும் உணர்ந்து சொன்னார்கள். தலையைக் காட்டத் துணிவீர்களா இந்த அருவியில்?



## எது ஜயிக்கும் ?

பறவையும் பாம்பும் சண்டையிட்டால் எது ஜயிக்கும் ?

பிரும்மாண்டமான பறவைகளும் பாம்பும் சண்டையிட்டால் அநேகமாகப் பெரிய பறவைகளே சண்டையில் ஜெயிக்கும். சில வகை பறவைகள் பாம்பை இரை தேடி வேட்டையாடும். செக்ரட்டரி பறவை பாம்பின் மேல் பாய்ந்து அதன் சட்டைக்குள் நகங்களைச் செலுத்திப் பதித்து, பாம்பைச் சுழற்றி அடிக்கும். கொல்வதற்குமுன் இவ்வாறு அதனை நிலைகலங்கடிக்கும். கனத்த இறகுள்ள பறவையானால் பாம்புக்கு அதைக் கடிப்பது கஷ்டமான காரியம்.

## ஒரு நாய் எத்தனை வேகமாக ஓடும்?

கிரேஹவுண்ட் நாய் அதி வேகமாக ஓடக்கூடியது. மணிக்கு 56 கிலோமீட்டர் வேகத்தில் செல்லும். நாய்ப் பந்தயம் மேனாடுகளில் மிகப் பிரசித்தமானது. மின்சார விசை கொண்ட பொம்மை முயலை முன்னால் ஓடவிட்டு விட்டு அதனை நாய்கள் துரத்தி ஓடும்படி செய்வார்கள். குதிரைப் பந்தயத்தைப் போலவே இந்த நாய்ப் பந்தயத்திலும் பணம் கட்டிச் சூதாடுகிறார்கள். சீரழியும் குடும்பங்கள் பலப்பல.



மேலே நட்சத்திரங்கள் இறுதி வெளிச்சத்தின் கர்வத்தில் மின்னிக் கொண்டிருந்தன.

இன்னும் இருள் பிரியவில்லை. எது சுவர், எது கதவு, எது கதவிடுக்கில் தெரியும் வானத் துண்டு என்று தெளிவுபடவில்லை. இடைவெளியே விடாமல் எங்கும் இருட்டை அமுக்கி அமுக்கி அடைத்து வைத்த மாதிரி இருந்தது.

சற்றைக் கெல்லாம் கோழிகள் கூவத் தொடங்கின. பிறகு இருள் புரண்டு கொடுத்துச் சலசலப்பை எழுப்பினாற் போல் ஏதேதோ சின்னச் சின்ன இறக்கை யொலிகள், தொடர்ந்து பலவிதக் கீச்சுக் கீச்சுக்கள். அதன் பின் காகங்கள் கரையும் சத்தம் வந்தது. மண் ரோட்டில் கைவண்டிகளின் இருசொலி கேட்டது.

காட்சி வடிவம் எடுப்பதற்கு முன் இயற்கை முதலில் ஒலி வடிவம் பூண்டது.

கண் முன்னே ஒரு முகத்திலிருந்து திரைகள் ஒவ்வொன்றாய்க் கழன்று விழுவதைப்போல் இழை இழையாக இருள் பிரிந்து உலகம் நட்சத்திரங்களைப் பலி வாங்கிக் கொண்டு படிப்படியாக உருவம் பெறலாயிற்று. துயில் எழுந்த மீனு திரும்பிப் பார்த்தாள். அம்மா எழுந்து தன் வேலைகளில் ஈடுபட்டிருந்தாள். அக்கம் பக்கத்தில் விளக்கு வெளிச்சங்களும் வைகறையின் இயக்க ஒலிகளும் எழும்பி விட்டன. சில வீடுகளிலிருந்து சின்னக் குழந்தைகள் அழும் சத்தம் வந்தது. அவளுடைய கடைசித் தம்பியும் விழித்துக் கொண்டு அழுத போது அம்மா அவனை ஏணையில் போட்டு ஆட்டினாள்.

வானம் நன்றாய் வெளுக்க ஆரம்பித்து விட்டது. மீனு சுறுசுறுப்பாய் எழுந்து பல் விளக்கிவிட்டு வீட்டுக்கு வெளியில் வந்து நின்றாள். இப்போது வெளியே வர அவளுக்குப் பயமில்லை. இரவில்தான் பயம். அப்போது அம்மாவின் பக்கத்தில் அவளைக் கட்டிக் கொண்டு படுத்துக் கொள்ள வேண்டும்போல் இருக்கும். சில சமயம் அம்மா அதற்கு இணங்குவாள். ஆசையாய் அவளை அணைத்துக் கொண்டு தலையையும் முகத்தையும் தடவிக் கொடுப்பாள். ''என் ராசாத்தி! நீ என்னாட்டம் கஷ்டப்படாம நல்லா யிருக்கணும்'' என்பாள். சில இரவுகள் அம்மா அவளைத் தன்னிடம் அனுமதிக்க மாட்டாள். அப்போதெல்லாம், ஒன்று, அம்மா அப்பாவோடு பேசிச் சிரித்துக் கொண்டிருப்பாள், அல்லது அப்பா கொடுத்துவிட்டுப் போன குடிகார உதைகளினால் அழுது கொண்டிருப்பாள்.

இப்போது மீனு தைரியமாய் வாசலில் நின்று கொண்டிருந்தாள். பொதுவாக எது ஒன்றும் இருட்டில் மறைபட்டு வெளிச்சத்தில் தான் கண்ணுக்குத் தெரியும். ஆனால் பயங்களும் பேய்களுமோ இருட்டில் வெளிப்பட்டு வெளிச்சம் வந்தவுடன் மறைகின்றன!

வரிசையான குடியிருப்புக்களில் அவள் வீடு சற்று மேட்டில் இருந்தது. ஆகவே, அவளைச் சுற்றி வீடுகளிலும், தெருவிலும் மனித நடமாட்டம் இருந்தபோதிலும் மேல் மட்டத்து வீட்டு வாசலில் அவள் வந்து நின்றபோது அந்த அதிக உயரத்தினால் 'இந்தா, பிடி!' என்று பார்வைக்கு எடுத்துக்



கொடுத்தது போல் அவள் தனித்துத் தெரிந்தாள்.

அப்படி எடுத்துக் கொடுக்கத் தக்கதாய்த் தான் இருந்தது அவள் தோற்றம். மீனுவின் எட்டு வயதான உருவத்தின் ஒவ்வொரு சிறு சென்டிமீட்டரிலும் அலாதியான உயிர்க்களை ததும்பிக் கொண்டிருந்தது. கசங்கியிருந்த பாவாடை, சொக்காய், படுத்து எழுந்திருந்ததால் கலைந்திருந்த தலைமுடி, உடம்பின் மாநிறம், இவை பார்வைக்கே தெரியவில்லை. பார்வையை வியாபிப்பவை பிரகாசமான பெரிய கண்கள், செதுக்கி வைத்த கூரிய சிறு மூக்கு, மெல்லிய உதடுகள், நீளவாட்ட முகத்தின் முனையிலிருந்த சிறு பிளவு கொண்ட அழகிய மோவாய்.

கண்களைத் தூர இறக்கி மீனு தெருக் கோடியைப் பார்த்தாள். அங்குதான் ஸ்கூல் பஸ் வந்து நிற்கும். அந்த வட்டாரத்தில் உள்ள மாணவச் சிறுமியரை ஏற்றிக்கொண்டு போக அந்த முனைதான் கேந்திரம்.

வெகு நேரமாய் நின்று கொண்டிருந்திருப்பாளோ? பால் வண்டி கடந்து போய் வெகு நாழியாகி யிருக்க வேண்டும். இப்போது தெருவில் கறிகாய்க்காரர்களின் ஒலி. அந்தக் குரல்களில் ஏற்றத் தாழ்வாய் எத்தனை சுரக் கதம்பம்! எங்கோ ஓர் அம்மாள் ''காரட் கால் கிலோ நாப்பத்தஞ்சு பைசாவா! என்னடி பகல் கொள்ளை இது? மார்க்கெட்டில் முப்பது பைசாவுக்கு விக்கறானே!'' என்று புகார் செய்ததும், ''முப்பது பைசாவுக்கு நீ வாங்கியாந்து குடும்மா, நான் இன்னையிலேருந்து இந்த யாபாரத்துக்குத் தலை முழுகிடறேன்'' என்று இன்னொரு பெண் குரல் கோபமாய்ச் சவால் விட்டதும் அவளுக்குக் கேட்டன. மேலும் கீழுமாய்த் தொனியை மாற்றி, ''ம்யூஸிகல்'' ஹாரன் அடித்துக் கொண்டு ஒரு பச்சை நிறக் கார் ஓடியது. எத்தனையோ முறைகள் சின்னக் குழந்தைகள் அம்மாதிரியான ஹாரன் சத்தத்தைக் கேட்டுப் பயந்து அழுதிருப்பது அவளுக்குத்



# ஸ்கூல் பஸ்!

ஆர். சூடாமணி

தெரியும்... தெருவில் வாகனப் போக்குவரத்து அதிகரித்திருப்பதையும் நன்றாய் வெளிச்சம் வந்து விட்டதையும் அவள் கவனித்தாள். மணி ஏழு இருக்கும்போல் இருக்கிறதே! பாட்டடிக்கும் காரைக் கவனிக்க வெல்லாம் இப்பொழுது நேரமில்லை. சரியாக எட்டேகால் மணிக்கு ஸ்கூல் பஸ் தெருக்கோடிக்கு வந்து விடும். இங்கிருந்து அது பிறகு ராஜா அண்ணாமலைபுரம், நந்தனம் என்று நெடுகப் போய்ச் சிறுமியரை ஏற்றிக் கொண்டு ஒன்பது மணிக்கெல்லாம் மாம்பலத்தில் உள்ள பள்ளியை அடைய வேண்டும். அவள் அப்படியே கம்மா நின்று கொண்டிருந்தால் பஸ் வருவதற்குள் தயாராக முடியாது.

மீனு திரும்பினாள். வீட்டினுள் நுழையு முன்பு வெளியிலிருந்த புல் தரையில் காலை வைத்ததும் கீழே இருந்த நெருஞ்சி முள் கொத்தாக உள்ளங்காலில் தைத்தது.

''ஸ்....'' என்று அவள் அந்தப் பாதத்தை எம்பிக்கொண்டு முள்ளை அகற்றக் குனிந்தாள். இந்த முள்ளும் கல்லுமெல்லாம் அவளுக்கு ஒன்றும் புதிதல்ல. இருந்தாலும் சில சமயம் தோன்றுவதுண்டு: 'உலகத்தில் முள்ளே இல்லாதிருந்தால் எத்தனை நன்றாக இருக்கும்!' தெருக் கோடியைத் தாண்டிக் காணப்படுகின்ற காம்பவுண்டு வீடுகளில் ஒன்றின் முன்புறத் தோட்டத்தில் பார்வையை மூச்சு முட்ட அடைத்துக் கொண்டு சூரியகாந்தி பூத்துக் கொட்டி யிருந்தது. சிறிது நேரத்துக்கு உலகமே மஞ்சளாகிவிடுகிற ஓர் ஏராளம். கண்ணாலேயே அள்ளிக் கொண்டு வந்து விடலாம்போல் ஓர் அழகு. அந்த மாதிரி பூவாக மட்டுமே எங்கும் இருந்தால்!

முள்ளைப் பிடுங்கி எறிந்து ரத்தத் துளியை அலட்சியமாய்த் தேய்த்து விட்டு அவள் வீட்டுக்குள் சென்றாள். ''போது விடியறப்பவே தெருவில் நிக்கப் போய்ட்டா என்ன அர்த்தம்?'' என்று அம்மா கடிந்து கொண்டாள். மீனு மும்முரமாய் அம்மாவுக்கு வேலைகளில் உதவி செய்யலானாள். சிறிய வீடாதலால் தரை பெருக்க அதிக நேரமாகவில்லை. மூன்று தங்கை தம்பியரைக் கவனித்து அவர்கள் அழுகையைச் சமாதானப்படுத்துவதுதான் பெரிய 'பேஜாராய்' இருந்தது. நேரம் ஆகிக் கொண்டிருக்கிறதே என்ற கவலையில் காதுகள் தெருவிலேயே ஒட்டிக் கிடந்தன. என்ன ஹார்ன் சத்தம் அது? ஸ்கூல் பஸ்ஸுடையதா? இருக்காது. இன்னும் அவ்வளவு நேரமாகவில்லை. இது ஏதோ சாதாரண பஸ். பல்லவன் போக்குவரத்துக் கழகத்தின் சொத்து. உடம்பில் பெரிய எழுத்துக்களில் பள்ளியின் பெயரையும், நெற்றியின்மேல் 'ஸ்கூல் பஸ்' என்ற கட்டியையும் இது தரித்துக் கொண்டிருக்காது. இதைப் போல் எத்தனை பஸ்கள் போனாலும் கவலையில்லை.

எனினும் அதிகம் தாமதிக்கக் கூடாது. அவள் குளிக்கக் கிளம்பினாள். அவள் இடுப்பிலிருந்து அகற்றப்பட்டதுமே கடைசிக் குழந்தையான ஒன்றரை வயதுத் தம்பி நிறுத்தியிருந்த அழுகையை மறுபடியும் தொடங்கினான். ஒன்றரை வயதுக் குழந்தையென்று யாரும் சொல்ல மாட்டார்கள். நோஞ்சான் உடல். இன்னும் பேசவோ நிற்கவோ வரவில்லை. பலம் முழுவதும் தொண்டையிலேயே ஒருமித்திருந்தது.

''தம்பியை அழ விடாதேடி'' என்று அம்மா முனகினாள். பாவம் அம்மா! அவளுக்குத் தொண்டையில் கூடப் பலம் இல்லை. அத்தனை மெலிவு. சோறாக்கவும் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளவும் மீனு வீட்டோடு இருந்தால் அவளுக்குச் சௌகரியமாய்த்தான் இருக்கும். ஆனால் என்ன செய்வது?

''நான் குளிக்கப் போகணும்மா. இவனை இப்ப நீதான் வைச்சிக்கணும்.''

''ஒலை கொதிக்குதடீ! புள்ளை நீயே கை வைக்கும். நான் சோறாக்கி எறக்கற முட்டும் கொஞ்சம் பார்த்துக்கடி மீனு, என் கண்ணில்லே?''

''அப்புறம் எனக்கு நேரமாயிடாதாம்மா? எட்டேகால் மணிக்கெல்லாம் நான் கௌம்ப வேணுமா? இப்பவே எத்தனை மணியாகுதோ....''

''இப்ப நீ போகாட்டி என்ன குடி முழுகிப் போயிடும்'' என்று சொன்னாலும் அம்மாவிடீ

சன்னக் குரல் பின்னும் தணிந்துதான் போயிற்று. மீனு போவதைத் தடுக்க நினைப்பது மடமை என்று அவளுக்குத் தெரியும்.

மீனு அவசரம் அவசரமாய் ஒரு காக்காய்க் குளி செய்தாள். உடை மாற்றிக் கொண்டு வந்து தேங்கா யெண்ணெய் புட்டியை எடுத்துப் பார்த்தாள். எண்ணெய் தீர்ந்து விட்டிருந்தது. புட்டியின் அடி விளிம்பில் சுற்றிக் கொண்டிருந்த வளையத்தோடு சரி. புட்டியை அப்படியே தலைகுப்புறக் கவிழ்த்து அந்த எண்ணெய் வளையத்தைச் சொட்டுச் சொட்டாய் உள்ளங் கையில் வாங்கி முடியில் தடவித் தலைசீவிக் கொண்டாள். முன் கூந்தலின் அடர்த்திக்குச் சம்பந்தமே இல்லாமல் பின்னால் சின்னஞ் சிறு பின்னல் மண்டையில் முளைத்த ஒரு விரல் போல் நீட்டிக் கொண்டிருந்தது. ஒருமுறை ஜானகி, ''கறிகாய்களுக்குச் செய்யறாப்பலே முனையில் கல்லைக் கட்டித் தொங்கவிடுடீ! நீளமாகும்'' என்று அவளைப் பரிகாசம் செய்திருந்தாள்.

நேரமாகிறதே! அவள் இப்படி நிதானமாய்ச் சீவிச் சிங்காரித்துக் கொண்டிருந்தால் ஸ்கூல் பஸ் வந்து விட்டுப் போய்விடும். அவளுக்காக நின்று கொண்டே இருக்குமா ?

வாசலுக்கு வந்து ஒரு தரம் வெளியே எட்டிப் பார்த்தாள். தெரு முனை காலியாய்த் தானிருந்தது. பஸ் இன்னும் வரவில்லை. எதிர்ச் சாரியில் இருந்த ஒரு மாமரத்தின் தலைக்கு மேல் இப்போது வெயில் ஏறியிருந்தது. இலைகளின் இடுக்குகள் வழியே ஒளி இறங்கிப் பற்பல வடிவங்களில் தரையைத் தொட்டது. அந்தப் பகல் நேரப் பிறைகளின் மேல் ஓர் அணில் புரண்டும் குதித்தும் விளையாடியது.

அணிலுக்கு முதுகில் கோடுகளை ராமர் சாமி கொடுத்தாராமே! அந்தச் சந்தோஷத்தில்தான் இது இப்படிப் புரளுகிறதோ? மீனு சிறிது நேரம் அக்காட்சியை உற்சாகத்தோடு பார்த்துக் கொண்டு நின்றபின் திரும்பினள். ''இந்தா, கொஞ்சம் வந்து புள்ளையைப் புடிச்சுக்க'' என்றாள் தாயார்.

''போம்மா, எனக்கு டயமாவுது.''

''சும்மா பறக்காதேடி! ரெண்டு நொடியிலே நான் வாங்கிக்கிடறேன், புடிச்சுக்க.''

மீனு தம்பியைக் கையில் வாங்கிக்கொண்டு தவித்தாள். இந்த அம்மா என்ன இப்படி உயிரை வாங்குகிறாள்! நேரமாகவில்லையா? மாலையில் வீடு திரும்பினபின் வேண்டுமானால் அவள் தம்பி தங்கையரைப் பார்த்துக் கொள்ளத் தயார். காலையில்கூடவா இப்படி? ஏன், இவளை அந்த இருவரில் யாராவது பார்த்துக் கொள்ளக் கூடாதா? ஆனால் ஐந்து வயதிலும் மூன்றுவயதிலும் இருந்த மற்ற இருவரும் என்ன பார்த்துக் கொள்வது? அவர்களும் சேர்ந்து இப்போது கூப்பாடு போடா திருக்கிறார்களே, அதுவே பெரிசு. அப்பா இரவு வீட்டுக்கு வந்தாரோ இல்லையோ?

''பிடிம்மான்னு....''

''இதோ...கொண்டாடி இப்படி. இப்பச் சரிதானா? என்னமோ வாசல்லே பல்லக்கு வந்து நிக்கறாப்போலத்தான் பறக்கறா...''

மீனு இன்னொரு முறை தன் தலைமீது சீப்பை ஓடவிடலாம் என்று நினைத்துத் திரும்பினாள். சட்டென்று கால்கள் நின்றன. முகமும் காதுகளும் உன்னிப்பாயின.

ஹாரன் சப்தம்தான். ஸ்கூல் பஸ்தான். அந்தப் பிரத்தியேக ஹாரன் ஒலி அவளுக்குத் தெரியாதா என்ன ?

''நான் போய் வரேம்மா!''

பாவாடை படபடத்து அலைக்க அவள் தன் வீட்டிலிருந்து தெருவுக்கு ஓடினாள். அதோ, தூரத்தில், தெருக் கோடியில், அது தான். ஸ்கூல் பஸ்தான். அவள் அதை நோக்கி இரைக்க இரைக்க ஓடினாள். தெருக் கோடியை அடைந்ததும் பஸ்ஸின் பக்கத்தில் — பள்ளியின் பெயர் பெரிய பெரிய எழுத்துக்களில் பதிவாகியுள்ள அதன் விலாவின் அருகில் எத்தனை நெருங்கி நிற்க முடியுமோ நின்றாள்.

ஹாரன் அடித்துக் கொண்டே ஸ்கூல் பஸ் நின்றதும், அங்கே எதிரிலிருந்த ஒரு கான்கிரீட் வீட்டினுள்ளிருந்தும் முனையைத் தாண்டியதும் வரிசையாய்க் காணப்படும் காம்பவுண்டுப் பங்களாக்களிலிருந்தும் ஐந்து சிறுமிகள் வெள்ளைச் சீருடை அணிந்த கோலத்தில் புத்தகப் பை, உணவுப் பெட்டி சகிதம் வெளிப்பட்டு ஓடி வந்து கலகலப்பும் சலசலப்புமாய் முண்டியடித்துக் கொண்டு பஸ்ஸில் ஏறினார்கள். ஏற்கனவே உள்ளே அதே சீருடையில் உட்கார்ந்திருந்த மற்றச் சிறுமியருடன் போய்ச் சேர்ந்து கொண்டனர்.

மீனுவின் கண்கள் அந்தக் காட்சியிலிருந்து அகலவில்லை. அவள் தினமும் பார்க்கும் காட்சிதான். எனினும் அவளுக்குத் திகட்டவில்லை. எத்தனை நாட்கள் பார்த்தாலும் திகட்டாது.

அவள் அந்தப் பஸ்ஸையும் அந்தச் சிறுமியரையும் பார்த்துக் கொண்டே நின்றிருந்தபோது மூச்சு வேகமாய் வந்தது. மூக்குத் துவாரங்கள் விரிந்திருந்தன. முகம் சிவந்து மோவாய் நடுங்கியது.

அவள் கண்களின் முன் அந்த பஸ்ஸில் இருந்த ஒவ்வொரு சிறுமியின் முகத்திலும் பிரகாசமான பெரிய விழிகளும் செதுக்கி வைத்த கூரிய சிறு மூக்கும் மெல்லிய இதழ்



# எண்ணைகள் எல்லாமே எண்ணைகள்தாம்...

# ஆனால் ஸிங்கர்* ஆயில்

'மல்டி-ப்ரொடெக்டிவ்' ஆகும்.




நீங்கள்
ஒருமுறை உபயோகித்துப்
பார்த்தீர்களானால் ஸிங்கர்*
ஆயிலின் தனிச்சிறப்பு தெள்ளெனத்
தெரியவரும். இது 'மல்டி-ப்ரொடெக்டிவ்'
(பல்வேறு பாதுகாப்பு தரும்)
எண்ணை. இது உங்கள் மெஷினுக்கு
எண்ணைப் பசை அளித்து, துருப்பிடிக்காமல்
காப்பதோடு, எல்லா உறுப்புகளும் நெடுங்
காலம் சீராக இயங்க உதவுகிறது.
எல்லா இயந்திரங்களின் உறுப்புகளையும் நன்கு
பராமரிக்க எப்பொழுதும் ஆல்-பர்பஸ்
ஸிங்கர்* ஆயிலையே உபயோகியுங்கள்.

0. 0852 லிட்டர்

இந்தியா முழுவதிலும் கிடைக்கிறது.



ஸிங்கர் அளிப்பவை சிறந்த பொருட்களே
சிங்கர் ஸூயிங் மெஷின் கம்பெனி,
207, டி. என். ரோடு, பம்பாய் 400 001

* ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட்மார்க்.

# கார் ஓட்டப்பயிலுகிறீர்களா?

## ஃபயர்ஸ்டோன் உங்களுக்கு உதவ முடியும்.

புதிய டிரைவர்களுக்குப் பயன் தரும் தகவல்கள் நிறைந்த எங்கள் புத்தகத்திற்குக் கேட்டு எழுதுங்கள். கார் ஓட்டும் போது எது செய்யலாம், எது கூடாது, என்று அதில் சொல்லப்பட்டிருக்கிறது. அது உங்களுக்குத் தன்னம்பிக்கையூட்டும் என்பது எங்கள் நம்பிக்கை. தன்னம்பிக்கையோடு கார் ஓட்டுவதற்கு நல்ல டயர்கள் தேவை என்பதை இப்போது அறிந்திருப்பீர்கள். ஃபயர்ஸ்டோன், கடந்த 33 ஆண்டுகளாக வலுவான டயர்கள், பம்பாயில் தயாரித்து வருகிறது.

ஃபயர்ஸ்டோன் டயர்கள், தனிப்பட்ட ட்ரிப்பிள் ஸ்ட்ரெங்த் அமைப்புக் கொண்டது. அதாவது ஒரு பிரத்யேக முறையில் டயருடன், ட்ரெட்டையும் பொருத்தி, பக்கங்களை வலுப்படுத்தி, ஒவ்வொரு நாணும் இன்சுலேஷன் செய்யப்படுவது.

உங்கள் கார், வலிமையும், நம்பகமுமான டயர்கள் உள்ளதா என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ளுங்கள் — ஃபயர்ஸ்டோன் டயர்கள்.

புதிய டிரைவர்களுக்கு ஃபயர்ஸ்டோன் அளிக்கும் தகவல்கள் ஆங்கிலத்திலும், தமிழிலும் இலவசமாக கிடைக்கும் இந்தப் பயனுள்ள புத்தகத்திற்குக் கேட்டு எழுதுங்கள். ஃபயர்ஸ்டோன் இந்தியா, P.O. Box 197, பம்பாய் 400 001




**ஃபயர்ஸ்டோன்**

**வலுவான டயர்**

இந்தியாவின் சாலைகளுக்கு ஏற்ப
இந்தியாவில் தயாரிக்கப்படுகின்றன.

RAOEUS/FS-2

களும், சிறு பிளவு கொண்ட மோவாயும் தெரிந்தன.

டிரைவர் வண்டியைக் கிளப்பி விட்டார். மீனுவின் பார்வை இன்னமும் அதிலிருந்து விலகவில்லை. அவள் உதடுகள் இலேசாய்த் துடித்தன. வண்டி உறுமலும் புழுதிப் படலமுமாய், தெருவைக் கிழித்துக்கொண்டு போயிற்று. போய் மறைந்தது.

குப்பென்று ஒரு நிசப்தம் எங்கும் சூழ்ந்தது. மீனு சிறிது நேரம் அப்படியே நின்று கொண்டிருந்தாள். அவள் வசித்த தெரு, குடிசைகளும் சாக்கடையும் சிறு ஓட்டு வீடுகளுமாய் அவள் பின் நீண்டது. ஒரு குடிசையில் ஓலைக் கதவின் பக்கத்தில் தரையில் துணி மீது விடப்பட்டிருந்த ஒரு சிறு குழந்தை, முகத்தில் வடியும் பால் வயிற்றுக்கு எட்டாமல் அழுது கொண்டிருந்தது.

சற்று நேரத்துக்கு முன் மரத்தடி பிறைகளின் மேல் குதித்து விளையாடிக் கொண்டிருந்த அணிலை ஒரு நாய் வாயில் கௌவிய படி ஓடியது.

மீனு தெரு முனையைத் தாண்டிப் பெரிய வீதியில் நடக்க ஆரம்பித்தாள். இப்போது கிளம்பினால்தான் ஒன்பதுக்குள் அவள் தான் போக வேண்டிய பங்களாவை அடைய முடியும். தாமதித்தால் எஜமானி ஜானகியம்மாள் கோபித்துக் கொள்வாள். அங்கு அவளுக்கு வீடு பெருக்கவும் பாத்திரம் கழுவவும், துணி துவைக்கவும், கடை கண்ணிக்குச் சென்று வரவும் சாப்பாடு போட்டுப் பத்து ரூபாய் சம்பளம் கொடுக்கிறார்கள். எந்தக் காரணத்துக்காகவாவது அவள் ஒரு நாள் போகத் தவறிவிட்டால் எஜமானி அம்மாள் அந்த மாதம் ஞாபகமாக 1/3 ரூபாய் கழித்துக்கொண்டு தருகிறாள்.

# கடல் மடியிலிருந்து எண்ணெய்!

இந்தியாவின் மேற்குக் கரையில் ஆழமில்லாத கடலில் எண்ணெய் அகழ்ந்தெடுக்கப் பெரு முயற்சிகள் நடந்து வருவதும் இரு அமெரிக்கக் கம்பெனிகள் இந்தியாவுடன் ஒத்துழைக்க முன்வந்துள்ளதும் ஏடுகள் சொல்லும் செய்தி. உலகில் இன்று ஏறத்தாழ 100 நாடுகளில் கடல் படுகைகளிலிருந்து எண்ணெய் எடுக்கப் பெரும் முயற்சி நடைபெறுகிறது.

அமெரிக்காவில் கடல் மடியிலிருந்து எண்ணெய் எடுக்க நடக்கும் முயற்சிகள் பற்றி எடுத்துரைக்கிறது. கட்டுரை.

அமெரிக்க நாட்டுக்கு இருபது ஆண்டுகளுக்கு வேண்டிய எண்ணெய், இயற்கை வாயு முழுவதும் அந்நாட்டின் ஆழமில்லாக் கடல் படுகைகளிலிருந்து கிடைக்குமென மதிப்பிட்டுள்ளார்கள். அந்நாட்டில் நிலத்தில் எவ்வளவு எண்ணெயும், வாயுவும் கிடைக்குமோ, அதே அளவு கடலில் கிடைக்குமாம்.

1985 முடிவுக்குள் அமெரிக்கா தனது விசைத் தேவையில் தன்னிறைவு காண வேண்டும் என்று அதிபர் நிக்ஸன் உறுதிபூண்டுள்ளார். இதற்காக அவர் வகுத்துள்ள ஒரு திட்டத்துக்கு 'புராஜக்ட் இண்டிப்பெண்டன்ஸ்' என்று பெயர். அதாவது எண்ணெய்க்காகப் பிற நாடுகளை நம்பி வாழாது சுதந்திரமாக விளங்க முயற்சி. கடலோர எண்ணெய், வாயு அகழ்வுப் பணிகளுக்குக் குத்தகைக்கு விடப்பட்டுள்ள கடல் படுகைப் பரப்பு மும்மடங்காக ஆக வேண்டும் என்று அவர் ஆணையிட்டுள்ளார். மெக்ஸிகோ வளைகுடாவில் 114 படுகைகளை 216 கோடி டாலருக்கு எண்ணெய்க் கம்பெனிகள் குத்தகைக்கு எடுத்தன. முன்பு ஒரு போதும் அரசுக்குக் கிடைக்காத தொகை இது. ஜூன் மாதத்துடன் முடிவடையும் நிதியாண்டில் ஏறத்தாழ முப்பது லட்சம் ஏக்கர் கடல் படுகைகளைக் குத்தகைக்கு விடுவார்கள். அடுத்த நிதியாண்டில் பரப்பு ஒரு கோடி ஏக்கராக உயரும்.

உலகின் எண்ணெய் உற்பத்தியில் ஐந்தில் ஒரு பங்கும், வாயு உற்பத்தியில் கிட்டத்தட்ட பாதியும் அமெரிக்காவில் கிடைத்து வருகிறது. அதுவும் போதாமல் அராபிய நாடுகளிடமிருந்து ஏராளமாக இறக்குமதி செய்து வந்தது. தற்போது அராபிய நாடுகள் அமெரிக்காவுக்கு எண்ணெய் ஏற்றுமதி செய்யச் சுணங்குவதாலும் விலை உயர்த்தியுள்ளதாலும் புதிய தன்னிறைவுத் திட்டங்கள் அமெரிக்காவில் வகுக்கப்படுகின்றன.

கடல் படுகை எண்ணெய் — வாயு கிணறுகளினால் விளையும் நன்மைகள் பலப் பல.

இன்னும் இருபத்தைந்து ஆண்டுகளுக்குள் ஜார்ஜியா, தெற்கு கரோலினா மாநிலங்களின் கடலோரங்களில் எண்ணெயும், வாயுவும் எடுக்க முற்படுகையில் புதிதாக 120,000 பேருக்கு வேலை கிடைக்கும். ஏறத்தாழ ஒன்றரை லட்சம் பேர் குடியேறுவார்கள். புதிய எண்ணெய்க் கிணறுகளினால் நிலமும், நீரும், காற்றும் கெடுவதைத் தடுக்கும் ஏற்பாடுகளும் கூடவே நடைபெறும். அமெரிக்க அரசு இதிலும் கண்ணும் கருத்துமாக இருந்து வருகிறது.

கடல் படுகையில் துளையிட்டு, எண்ணெய், வாயு எடுக்கும் ஓர் அமெரிக்கத் துரப்பணக் கப்பல்.



பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் I

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| தாராபுரம் | 1 | காலை 9-00 -- 10-00 | சாந்தா கிளினிக், சர்ச் ரோடு. |
| பழனி | 1 | காலை 11-00 -- 12-00 | ஜெயா மெடிகல் மார்ட் |
| உடுமலைப்பேட்டை | 1 | மாலை 3-00 -- 4-00 | ராஜேந்திரா அண்டு கோ., கடை வீதி |
| பொள்ளாச்சி | 1 | மாலை 5-00 -- 6-00 | தி எம்பயர் பார்மஸி. |
| பாலக்காடு | 2 | காலை 9-11 | K. H. பரசுராம், கல்தாண்பேட்டை. |
| ,, | 2 | மாலை 3 - 5 | Rainbow Quarters, Opp. Govt. Hospital |
| கோயமுத்தூர் | 3 | காலை 9-11 | சீதாராம் வாட்ச், ஸ்டேட் பாங்க் ரோடு. |
| ,, | 3 | மாலை 2 - 4 | ரெயில்வே ஸ்டேஷன் எதிர்புறம் |
| மேட்டுப்பாளையம் | 3 | மாலை 5-00 -- 6-00 | தி மேட்டுப் பாளையம் மெடிகல் ஸ்டோர்ஸ். |
| சத்தியமங்கலம் | 4 | காலை 8-00 -- 9-00 | C. R. K. மெடிகல்ஸ், கடைவீதி |
| கோபி | 4 | காலை 10-00 -- 11-00 | வாஸன் அண்டு கோ., கச்சேரி வீதி. |
| பவானி | 4 | மாலை 2-00 -- 3-00 | M. L. செட்டியார் அண்டு சன்ஸ், கடை வீதி. |
| மேட்டூர் அணை | 4 | மாலை 4-30 -- 5-30 | ஸ்ரீ ராமன் வாட்ச். |
| ஈரோடு | 5 | காலை 9-00 -- 11-00 | ஸ்ரீ கிருஷ்ணா டாக்கீஸ். |
| திருப்பூர் | 5 | மாலை 4-00 -- 5-30 | P. R. மணியம் ஸ்டோர்ஸ், பல்லடம் ரோடு. |
| திருச்சி | 6 | காலை 11-00 to<br>மாலை 6-00 | திருச்சி ஆயுர்வேதிக் யூனியன்,<br>சின்னக் கடைத் தெரு. |
| தஞ்சாவூர் | 7 | காலை 7-00 -- 9-00 | Dr. S. வெங்கடராஜன் வைத்தியசாலை,<br>சகாநாயக்கன் தெரு. |
| கும்பகோணம் | 7,<br>17,27 | காலை 10-00 to<br>மாலை 5-00 | ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை பிராஞ்சு,<br>94, டவுன் ஹைஸ்கூல் ரோடு. |
| சீர்காழி | 8 | காலை 7-00 -- 8-00 | பிரம்ம வித்யா ஆயுர்வேத வைத்தியசாலை,<br>ரயில்வே ஸ்டேஷன் ரோடு. |
| மாயூரம் | 8 | காலை 9-30 -- 12-00 | ஸ்ரீ வெங்கடேசா மெடிகல் ஹால், பட்டமங்கலம் தெரு. |
| நாகப்பட்டினம் | 8 | மாலை 5-00 -- 6-00 | நாகை மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திருவாரூர் | 9 | காலை 7-30 -- 9-00 | தன்வந்தரி மெடிகல் ஹால், 21, மடப்புரம் பாட்டை. |
| விஜயபுரம் | 9 | காலை 10-00 -- 11-00 | சகுந்தலா பார்மஸி, நாகை ரோடு. |
| திருத்துறைப்பூண்டி | 9 | மாலை 2-00 -- 3-30 | ஸ்ரீ T. V. சந்திரசேகரம் பிள்ளை, கடை வீதி. |
| பட்டுக்கோட்டை | 9 | மாலை 4-30 -- 6-30 | கோபால் விலாஸ், பெரிய தெரு. |
| புதுக்கோட்டை | 10 | காலை 8-00 -- 10-00 | நியூ லக்ஷ்மி டிஸ்பென்ஸரி, கீழ ராஜவீதி. |
| தேவகோட்டை | 10 | மாலை 2-30 -- 3-30 | ஸ்ரீ சோமசுந்தரம் மெடிகல் ஸ்டோர்ஸ், ஆர்ச்சு ரோடு. |
| காரைக்குடி | 10 | மாலை 4-30 -- 6-00 | நியூ கௌரி வாட்ச், மகர் நோம்பு அக்ரஹாரம். |
| சிவகெங்கை | 11 | காலை 8-30 -- 10-00 | கௌரி அண்டு கோ., கடை வீதி. |
| மதுரை | 11 | காலை 11-00-12-30 | T. N. சொக்கலிங்கம்பிள்ளை சன்ஸ், |
| ,, | 11 | மாலை 3-00- 6-00 | வடக்கு சித்திரை வீதி. |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 3 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை, B-II, 1வது கிராஸ், தில்லைநகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

**ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை,** கரூர் (போன் : 87)
திருச்சி ஜில்லா

# சத்தியவாணிக்கு ஒரு துணை!

சீதா

"சென்னை பல்கலைக் கழக செனேட் மண்டபத்தில் மாணவ, மாணவியர் பேச்சுப் போட்டி ரொம்ப நன்றாக இருந்தது" என்றாள் ஹேமா.

"என்ன விஷயத்தைப் பற்றிப் பேச்சுப் போட்டி?" என்று கேட்டாள் அன்னபூரணியம்மாள்.

"'பெண்ணுக்குரிய இடம் வீடு' என்ற கருத்தை ஆதரித்தும் எதிர்த்தும்" என்றாள் சாரு.

"யார் யார் எந்தக் கட்சி பேசினா?" என்று கேட்டாள் அன்னபூரணியம்மாள்.

"சொல்லணுமா என்ன? இந்தக் காலத்துப் பெண்கள் எல்லாம் ஊரைச் சுற்றப் போறோம்னு பேசியிருக்கும். புருஷப்பசங்கள் எல்லாம் பெண்கள் வீட்டுக்குள் அடைபட்டுக் கிடந்தால் தேவலை என்று பேசி விருப்பார்கள்" என்றாள் அகிலாண்டம்மாள்.

"அது எப்படி மாமி அவ்வளவு கரெக்டா சொன்னேள்? புருஷப் பசங்களும் சரி, பெண்களும் சரி, இரண்டு கட்சியிலும் பேசினாலும் ஒட்டு மொத்தத்தில் நீங்கள் சொன்னது தான் அவர்கள் அபிப்பிராயம்" என்றாள் ஹேமா.

"முதல் மந்திரிக்கு எதிராகப் பேசியும் அவரை அலட்சியம் செய்தும் வந்தாளாம். கடைசியில் வீட்டுக்கு அனுப்புவதில் முடிந்தது!"

"மொத்தத்தில் நமது அரசியலே சிரிப்புக்கு இடமாகி விட்டது" என்றார் சங்கரன்.

"அத்தை, உனக்கு மோனலிஸாவையும் அவளது நமட்டுச் சிரிப்பையும் பற்றித் தெரியுமோ?" என்று சுந்தர் கேட்டான்.

"யாருடா அந்த மோனலிஸா? எந்த ஊர்க்காரி? எங்கிருக்கா?"

இதற்கு ஹேமா பதில் கூறினாள்: "மோனலிஸா என்பது ஒரு பெண் சித்திரம் அத்தை. பாரிஸில் இருக்கிறது. லியனார்டோ டா வின்ஸி என்ற இத்தாலிய சித்திரக்காரன் பலநூறு ஆண்டுகளுக்கு முன் தீட்டினான். அந்தப் படத்திலே என்ன விசேஷம் என்றால் அந்தப் பெண் ஒரு நமட்டுச் சிரிப்பு சிரிக்கிறாள். அதைப் பற்றி ஏக விமரிசனங்கள் — அவள் எதை நினைத்துச் சிரிக்கிறாள்? அந்தச் சிரிப்பின் பொருள் என்ன? என்று கேட்டுப் பலவிதமாகப் பதில் சொல்லி வருகிறார்கள். அந்தச் சர்ச்சையில் லண்டன் டாக்டர் ஒருவர் புகுந்து ஒரு வியாக்கியானம்வழங்கியிருக்கிறார்.."

"அதை நீயும் பார்த்து விட்டாயா, ஹேமா?" என்றான் சுந்தர்.

"இன்னும் பார்க்காமல் இருப்பேனா?— சொல்லு! நீயே சொல்லு!" என்று வெட்கினாள் ஹேமா.



"ஒரு பையன் ரொம்ப நன்றாகச் சொன்னான் — ஓர் ஆண் சம்பாதிக்கானானால் அவன் குடும்பம் முழுவதும் பிழைக்கிறது. அந்த வேலைக்குப் போட்டியாக ஒரு பெண் வந்தாளானாலும் வேறொரு குடும்பத்தைப் பட்டினி போட்டதாகிறது. அதனால் வேலையில்லாத் திண்டாட்டம் மிகுந்துள்ள இந்த நாட்களில் பெண்கள் வேலைக்குப் போகாமல் இருப்பதே நலம்!' என்றான்" என்றாள் சாரு.

"அவன் சொல்வதிலும் ஓர் உண்மை இருக்கும் போலத்தான் படுகிறது!"

இருந்தாலும் ஆண்களுக்குச் சமமாக என்ஜினீரிங், வைத்தியம் என்று எல்லாம் படிப்புச் சொல்லிக் கொடுத்து விட்டு வீட்டுக்குள் பெண்ணைப் பூட்டி வைப்பதா? பெண் கல்விக்காக அரசாங்கம் செலவழிக்கும் பணம் வீண் விரயம் என்று ஆகிவிடும். அதற்காகவாவது பெண்கள் வேலைக்குப் போக வேண்டியதுதான்" என்றார் சங்கரன்.

"சத்தியவாணி முத்து மந்திரியாக வந்தாள். என்ன ஆச்சு? என்னை யாரும் லட்சியமே பண்றதில்லை என்று கூக்குரலிட்டாள். உத்தியோகம் பறி போயிற்று" என்றாள் அன்னபூரணியம்மாள்.

"அவளுக்குத் துணையாக இருக்கட்டுமே என்று ஹரியானா முதல் மந்திரி பன்ஸிலால் ஸ்ரீமதி சந்திராவதி என்ற பெண் மந்திரியை விரட்டி விட்டார்!" என்றான் சுந்தர்.

"ஏனாம்?" என்றாள் அகிலாண்டம்மாள்.



''ஹேமா கூற வெட்கப்படும்படியாக அதில் என்ன இருக்கிறது?'' என்று கேட்டாள் அகிலாண்டம்மாள்.

'' 'அவள் புன்சிரிப்பு, அவள் நிறைமாத கர்ப்பிணியாக இருக்க வேண்டும் என்று காட்டுகிறது' என்கிறார் அந்த டாக்டர். கர்ப்பமுற்றதில் உள்ள மனநிறைவும் மகிழ்ச்சியும் அந்த வட்ட முகத்திலும் கதுப்புக் கன்னங்களிலும் பிரதிபலிக்கிறதாம்!'' என்றான் சுந்தர்.

''நம்ம நடராஜர் விக்கிரகத்தில் அமைந்துள்ள அந்தக் குமிழ் சிரிப்பை எவ்வளவு உருக்கமாகப் பாடியிருக்கிறார் அப்பர்'' என்றாள் அன்னபூரணியம்மாள்.

''நம்ம கலாசாரமே அதுதான். ஒரு குமிழ் சிரிப்பானாலும் அதை மனித உருவத்தில் காணாமல், தெய்வத்தினிடம் ஏற்றி அனுபவிப்பது நமது மரபு'' என்றார் சங்கரன்.

''அதனால் மனசு எவ்வளவு பரிசுத்தப்பட்டு விடுகிறது!'' என்றாள் அத்தை.

''ஹேமா! விஷயம் வேதாந்தபரமாகப் போய்க் கொண்டிருக்கிறது. நாம் போகலாம் வாடி!'' என்றாள் சாரு.

---




## வெங்கட்டு – 60

படித்துப் பாருங்கள் என்பதை விடப் பார்த்துப் படியுங்கள் என்று சொல்லலாம். அந்த அளவுக்கு இந்த அறுபதாண்டு விழா மலரில் ரமண மகரிஷியின் பல விதமான தோற்றங்கள் வண்ணச் சித்திரங்களாக இடம் பெற்று நெஞ்சைக் குளிர்விக்கின்றன. பகவானின் அருள் வாக்குகளும் உள்ளன.

அறுபதாண்டு விழா நடந்தது வெங்கட்டு என்று அனைவராலும் அன்புடன் அழைக்கப்படும் வெங்கடராமனுக்கு.

மகரிஷி அனைத்தையும் துறந்துவிட்டாலும் ஆசிரமம் நடந்தாக வேண்டும். நற்பணிகள் தொடர வேண்டும். இதற்குப் பணமும்வேண்டும். அதை நல்லபடியாக நிர்வகிக்கும் ஆற்றல் உள்ளவர்களும் வேண்டும். எனவேதான் எதையுமேதமதெனப் பாவிக்காத ரமணர் கூட உயில் எழுதச் செய்து அதன் கீழ் ஒரு கோடு இழுக்கவும் நேர்ந்தது — கையெழுத்துக்குப் பதிலாக.

ரமணர் தேர்ந்தெடுத்த நபர், வெங்கட்ராமன். உறவினர்தான் மகரிஷிக்கு. ஆசிரமத்தைக் கண்ணும் கருத்துமாய்க் காப்பதில் உறவினருக்கு இருக்கக் கூடிய சிரத்தை வேறு மனிதருக்கு இருக்க முடியாது என்று மகரிஷி கருதினார். பகவான் பொறுக்கி யெடுத்த நபர் சரியில்லாமல் போவாரா?

கடனில் ஆழ்ந்திருந்த ஆசிரமத்தை மீட்டது மட்டுமல்லாமல் அதற்கு மூலதனமும் சொத்தும் கூடச் சேகரித்தார். ஆசிரமத்தில் பல அடிப்படை வசதிகள் ஏற்படுத்தித் தந்தார்.

திறமையான நிர்வாகம் பண்ணும் வெங்கட்டு சிறு வயதிலேயே பகவானின் அன்பைப் பெற்றவர். ஒரு நிகழ்ச்சியை அவர் இன்னும் மறவாமல் அடிக்கடி கூறுவார். நொண்டிக் குரங்கு ஒன்று தினம் வந்து பகவான் அளிக்கும் பிரசாதத்தைப் பெற்றுச் செல்லும். ஒரு நாள் ஜன்னலில் அதற்கு வைக்கப்பட்டிருந்த வாழைப் பழங்களுள் ஒன்றை வெங்கட்டு தின்று விட்டான். குரங்கு வந்து பார்த்துப் புரிந்து கொண்டு விட்டது. கொடுத்தது ஓர் அறை!

ரமணர் சொன்னார்: ''உனக்கு வேண்டியதுதான்! பிறர் பொருளுக்கு ஆசைப் படலாமா?''

வெங்கட்டு அறுபதாண்டு விழா நினைவு மலர் அற்புதமான முறையில் அச்சாகியிருக்கிறது. விலை ஏதும் குறிப்பிடப்படவில்லை. விலாசம்: ரமணாச்ரமம், திருவண்ணாமலை.





□ □ □ □ □ □ □

## Vishnu Sahasranama - A Story

தோத்திர நூல்களுள் உன்னத ஸ்தானம் பெற்றுள்ள விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் மூழ்கித் திளைத்துப் பல ரசமான விஷயங்களை விளக்குகிறார் நூலாசிரியர். நாமங்கள் அடுக்கப்படும் பாங்கிலேயே தொடர்பான ஒரு தத்துவ இழை உள்ளோடுவதை முக்கியமாக விளக்கி வைத்திருக்கிறார். பல நாமங்களுக்கு இவர் கொள்ளும் பொருளிலும் அவற்றை ஒரு தலைப்பில் இசைப்பதில் காட்டும் திறனிலும், இலக்கியச் சுவையும், தெய்வ மணமும் கமழ்கின்றன. ஆனால் சில இடங்களில் அதீத கற்பனையில் இறங்கியிருப்பதாகவும் தோன்றத்தான் செய்கிறது. எவ்வாறாயினும் ஒரு புதுக் கோணத்திலிருந்து 'விஷ்ணு ஸஹஸ்ர நாம'த்தைக் காண்பதில் நூதனமான ஒரு நிறைவைப் பெறுகிறோம்.

Published by Dr. H. J. Achar (Author) Karur, Price Rs. 12/-.

□ □ □ □ □ □ □

# தங்கப் பதக்கம்

காந்தன்





கடமையில் கருத்துள்ள போலீஸ் அதிகாரியாகவும், முரட்டு மகனை வழிப்படுத்த முடியாமல் வேதனைப்படும் தந்தையாகவும் வரும் சிவாஜி தம் பண்பட்ட நடிப்பின் மூலம் தனியிடம் தேடிக் கொண்டுவிட்டார். கனிவும், கசிவும் இல்லாத கடமை வீரனை போலீஸ் அதிகாரிக்கும் இதயம் உண்டு; அதில் நெகிழ்வும் உண்டு என்பதை வெளிப்படுத்தும் நயம் ஒன்று போதும், சிவாஜியைப் பாராட்ட!

கே. ஆர். விஜயாவுக்கு முழுக்க முழுக்க இது ஒரு வெற்றிப் படம். முரட்டு மகனிடம் அவன் தந்தையைப் பற்றிக் கர்வத்தோடு கூறும் தோரணையில்தான் எத்தனை பெருமிதம், அதே சமயத்தில் எத்தனை அழுத்தம்! மகனுக்கும், மருமகளுக்கும் அலங்காரம் செய்திருந்த படுக்கையறையில் தானும் தன் கணவனுமாகப் படுக்க நேர்ந்ததை எண்ணி லக்ஷ்மி அடைந்த நாணத்தை விஜயா அழகாகப் படம் பிடித்துக் காட்டிப் படத்துக்குப் பெருமை சேர்த்திருக்கிறார்.

ஸ்ரீகாந்துக்கு வழக்கமான வில்லன் பாத்திரம் இல்லை. ஒரு புதிய குணசித்திரம். நன்றாயிருக்கிறது. 'சோ'வுக்கு இரட்டை வேடம் — அண்ணன் தம்பி. அண்ணன், ஹெட்கான்ஸ்டபிள். தம்பி அரசியல்வாதி. ஹாஸ்யத்தையும் அரசியலையும் கலந்து ரசிகர்களுக்கு ஒரு நல்விருந்து அளிக்கிறார். மனோரமா அந்த ஹாஸ்ய விருந்துக்குத் துணையாயிருக்கிறார். மேஜர் சுந்தரராஜன் பயங்கரத் திருடனாக வந்து நல்லவனாக மாறுகிறார். அவர் நடிப்பிலும் நல்ல மாறுதலைக் காண்கிறோம்.

பிரமீளாவுக்கு நல்ல வாய்ப்பு, நன்கு பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

அநுபவம் முதிர்ந்த டைரக்டர் பி. மாதவனின் டைரக்ஷன் இவ்வண்ணப் படத்துக்குத் தனிச் சிறப்பைச் சேர்க்கிறது. படத்தின் ஒளிப்பதிவு பாராட்டுப் பெறுகிறது.

''நல்லதொரு குடும்பம்'', ''சோதனை மேல் சோதனை'' என்ற பாடல்கள் இரண்டும் படம் பார்ப்பவர்களுக்கு நிறைவைத் தருகின்றன.

மகேந்திரனின் கதை, வசனம் பாராட்டுக்குரியவை.

நல்ல நடிப்புக்கு நல்லதொரு இலக்கணம் வகுத்துத் தந்திருக்கும் படம் 'சிவாஜி புரொடக்ஷன்ஸின்' உன்னதத் தயாரிப்பான 'தங்கப் பதக்கம்' — கொடுக்கலாம்.

# சிறியவயதில் வலிய அனுபவம்

## கோவி. மணிசேகரன்

ம்....ம்....

மூக்கால் ராகம் போட்டு மூக்கி முனகி அழும் அந்தச் சின்னஞ் சிறு பையனைக் காண முனுசாமிக்கு முகமெல்லாம் வியர்த்துக் கொண்டிருந்தது. எத்தனை நேரம்தான் இந்தச் சிறுவன் அழுது கொண்டிருப்பான்? தேவை ஒரு ஐஸ்கிரீம் !

அரை மணி நேரமாக வியாபாரம் ஆகிக் கொண்டிருந்தது. குண்டும் குழியுமாக இருக்கிற வீதியில் குடிசைகள் வரிசையாகக் காணப்பட்டன. எல்லாமே டரட்டைத் தலையும் பாதி உடம்பைக் கீழும் மேலுமாக மறைத்த சின்னஞ் சிறார்கள். ஏழைமையின் முத்திரை !

''ம்மா.... ஐசுமா......!''

மீண்டும் அந்தச் சிறுவன் குரல் கொடுத்தான். ஓசையில் கழிவிரக்கம் விக்கலாய் வெளி வந்தது. நல்ல உச்சி வேளை. கத்திரி வெயில் சென்னை மாநகருக்குத் தீ வைக்காத குறை !

''கய்தே, கய்தே ! காசில்லேன்னு கேக்க மாட்டேன்னுதே ! இந்தக் கசமாலம் புடிச்ச ஐஸ்காரன் இப்ப வந்து தொலையணுமா ?'' தனக்குள் அலுத்துக் கொண்டாள் ஆண்டாளு.

'' ஐஸ்..... பால் ஐஸ்...:'' ஐஸ் விற்கும் சிறுவன் — முனுசாமி ஓங்கிக் குரல் கொடுத்தான். மிச்ச மீதியிருக்கும் பிள்ளைகள் காதுகளில் கேட்க வேண்டுமாம்! அந்தப் பகுதியில் எத்தனை சிறுவர், சிறுமியர் இருக்கின்றனர்; யார் யாரிடம் கிராக்கி படும் என்பன போன்ற புள்ளி விவரம் அவனுக்கு அத்துபடியானது. இன்னும் ஏறத் தாழ எட்டு ஐஸ்கிரீம் குச்சிகள் விற்பனையாக வேண்டுமே!

''ஏண்டாப்பா ... போய்த் தொலையக் கூடாதா?'' — வேதனையும் வெறுப்புமாக ஆண்டாளுவின் நாவிலிருந்து சொற்கள் வெடிபட்டன!

''நீ இன்னும்மா.:.. நீ....! இன்னும் வேபாரமே முடியலே.... உன்கிட்டே துட்டு இல்லேன்னு ஊர்லே இருக்கவங்க கிட்டேயும் இருக்காதுன்னு அர்த்தமா? ஆமாம்.....' இந்தக் குப்பத்துக்கு நீ புதுசா?''

அப்படியே மென்னியைத் திருகிப்போட்டு விடலாம் போலப் பார்த்தாள் ஆண்டாளு.

''ஜானூண்டு இருக்கு.... கேக்கறதைப் பாரு...'' — ஆண்டாளு நெஞ்சில் ஆத்திரம் பொங்கியது.

ஐஸ் விற்கிற முனுசாமிக்கு வயது பன்னிரண்டானாலும் இருபத்திரண்டு வயசு விஷயங்களை அறிந்தவன் ''ஐஸ்... பால் ஐஸ்....''

''நீ நாசமாய்ப் போக...'' கையை முறித்து மனத்துள் முனகிக் கொண்டாள்



ஆண்டாளு. சில பிள்ளைகள் அவ்வப்போது ஓடிவந்து குச்சி ஐஸ்கிரீமை வாங்கிச் சென்றன. அங்கே பால் ஐஸா வியாபாரமாகும்? ஏதோ மனப்பாடம் பண்ணிக் கொண்ட வியாபாரக் குரல்.... 'ஐஸ்... பால் ஐஸ்...!'

அந்தச் சாலிக்கிராமச் சாலையை விடுத்து என். ஜி. ஓ. காலனிப் பகுதியைத் தாண்டி




னால் பால் ஐஸ் பத்து வியாபாரம் ஆகும். அப்படியே டெலிபோன் காலனியைச் சுற்றிக் கொண்டு தசரதபுரம் மார்க்கமாக ஐஸ் பெட்டி வண்டியைத் தள்ளிக் கொண்டு சென்றுவிடுவான். வாரத்துக்கு இரண்டு நாள் விஜயம். மூன்று அல்லது நான்கு ரூபாய்க்கு அந்தப் பக்கம் கிராக்கி பட்டுவிடும்.

எடுத்த மூன்று காசுகளை முந்தானையில் முடிக்கப் போனாள் ஆண்டாளு. மீண்டும் பையன் அடம் பிடித்து அழுகையைச் சற்றுக் கூட்டினான். மூக்கில் சளியும் வாயில் ஊறிய நீரும் ஒழுகின. ஐந்து வயதுப் பையன்.

''இன்னும் ரெண்டு பைசா இருந்தாக்க இந்தப் பேஜாரு புடிச்ச கய்தைக்கு ஐஸ் வாங்கித் தரலாம். இன்னா பண்றது?...''

முனுசாமி வியாபாரம் ஆனது அவ்வளவு தான் என்று முடிவு கட்டி வண்டியைத் தள்ளப் பார்த்தான்.

''ஓ.....'' வென்று கதறினான் பையன்.

''டேய் கண்ணு...ராஜா... ஐஸ் பையா... கொஞ்சம் இருடா... இரண்டு காசு யார் கிட்டேயாவது பிச்சை எடுத்தாச்சும் இந்தக் கசமாலத்துக்கு ஐஸ் வாங்கிக் குடுத்து வாயடக்கறேன்....''

முனுசாமிக்குத் தர்மசங்கடமாகப் போயிற்று. கொஞ்ச நேரம் தயங்கினான். ஒரு காசு லாபத்துக்கு எவ்வளவு நேரம்தான் காத்திருப்பான்?

''ஐயா! ரெண்டு காசு கொடுங்கய்யா! இந்தக் கசமாலம் ஐஸுக்கு அடம் புடிக்குது!''

தெருவில் போனவர்களில் யாருமே அவளை லட்சியம் செய்யவில்லை.

பையன் செய்கிற அட்டகாசத்தைக் கண்டு ஒரு குறை அழுதுவிடலாம் போலத் தோன்றியது ஆண்டாளுக்கு! ''இந்தச் சோமாறிப் பையனாலே பிச்சை எடுக்கற கேவலப் பொயப்பாப் போச்சு!'' என்று தன் கேவலத்தை மறந்து கூறிக்கொண்டே பையனின் முதுகில் 'பொத்து பொத்'தென்று சாத்தினாள். பையனும் ''அம்மா ஐஸ், அம்மா ஐஸ்!'' என்று அப்பவும் ஐஸை விடாமல்தான் கதறினான்.

''இந்தாம்மா பையனை ஏன் அடிக்கணும்? அவன் இன்னா செய்வான்?'' — முனுசாமி குறுக்கே புகுந்தான்.

''சர்தான் போடா! நாயம் பேச வந்துட்டான்! உன்னாலெ வந்த எயவுதானே இது!'' — ஆண்டாளு மேலும் அடிக்கப் போனாள். குறுக்கே ஓடிய முனுசாமி, அந்தப் பையனை இழுத்து வந்து, பெட்டியைத் திறந்து ஓர் ஐஸ்குச்சியை எடுத்துக் கொடுத்தான். பையனும் அழுகையை அடக்கினாலும் ராகத்தை அடக்காமல் இழுத்துக்கொண்டே ஐஸை எடுத்து உறிஞ்சினான்.

''ஏண்டா தம்பி! இதை முன்னாமே செஞ்சிருந்தா நான் ஏன் பிச்சை எடுக்கறேன்... இந்தக் கசமாலத்தைப் போட்டு ஏன் தப்பறேன்!'' — ஆண்டாளு ஒரு பெரிய மனிதனிடம் பேசுகிற பாவனை போலக் கேட்டாள்.

''இன்னா செய்யறதுமா! உங்கிட்டே மூணு காசு வாங்கிக்கிட்டு ஐஸ் கொடுத்தா ரெண்டு காசு என் முதலாளிக்குத் துரோகம் செஞ்சதா ஆகும்.''

''இப்ப இன்னா ஆச்சு?''

''நீ எடுத்த பிச்சைக்கு ரெண்டு காசு தர்மம் செய்தேன்னு நெனச்சுக்குவேன். எங்கம்மா சொன்னாங்க...நம்ம ஒருத்தருக்குச் செய்யற துரோகம் ஐஸ் மாதிரி கரைஞ்சு போயிடும். ஆனா பண்ற தர்மம்தான் குச்சி மாதிரி கடைசி வரை நிக்குமாம். சரி...சரி... மூணு காசை எடு...!''

''மூணு காசா...?''

''ரெண்டு காசு தர்மம் பண்ணேன்னு வச்சுக்க... முந்தானையிலே இருக்கிற மூணு காசையாவது 'முதலாளிக்குக் கொண்டு போய்க் தரக் தாவலையா?''

ஆண்டாளு சின்ன மனுஷி புத்தியைக் காட்டிச் சிரித்தாள்.

''இன்னாம்மா சிரிக்கிறே? ஏமாத்துறியா?''

''ஏமாத்தலே! தர்மம் அஞ்சு பைசாவா இருக்கட்டும்!''

ஆண்டாளு பையனை அழைத்துக்கொண்டு நடையைக் கட்டினாள்.

''ஐயய்யோ! அஞ்சு காசு நட்டமா?!'' முனுசாமி ஊரைக் கூட்டவில்லை.

அவன் உலகை நினைத்து ஸ்தம்பித்து நின்றுவிட்டான். சிறிய வயதில் பெரிய அனுபவம்தான்!



# இரண்டு ரூபாய் இதயம்!

"ஓர் இளநீர் ரூபாய் இருபது பைசாவா? அடுக்காது!"

அல்டாப் அப்பாசாமி இதுவரை இருபத்தொரு முறை இந்த வாக்கியத்தையே சொல்லியிருப்பான். இருபத்தொரு முறை க்ஷத்திரியர்களை வேர் அறுத்த பரசுராமர் குலத்தில் உதித்தவன் போல.

எத்தனையோ நாட்கள் ஆசையை வளர்த்து அதற்கேற்பப் பணத்தையும் சேர்த்துக் கொண்டு உல்லாசப் பேருந்தில் மகாபலிபுரம் வந்திருந்தான் அப்பாசாமி. அன்றைய மதியச் சாப்பாடு போகக் கையில் இரண்டே இரண்டு ரூபாய் தான் பாக்கியிருந்தது; ஒற்றை நோட்டாக. அதை உடைத்து இளநீர் குடிக்க மனம் வரவில்லை அவனுக்கு. ஆனால் அவனோடு பேருந்தில் உல்லாசப் பயணம் வந்த இளைஞர்களோ நினைத்த இடத்தில் நினைத்த பொழுது இளநீர்களைக் குலைகுலையாக வெட்டிச் சாய்த்து வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டார்கள்.

பேருந்து புறப்பட இருபத்தைந்தே நிமிஷம் மீதியிருந்தபோது ஆசை அரக்கன் அவனை வெற்றி கொண்டான்.

நான்கு சவுக்கு முளையை அடித்து, வந்தவர்கள் உட்கார்ந்து சாப்பிடுவதற்காகக் கள்ளிப் பலகையில் ஒரு பெஞ்சு தயாரித்திருந்தான் இளநீர் விற்கும் கிழவன். அதில் உட்கார்ந்து ஆற அமரச் சாப்பிட்டுவிட்டு இரண்டு ரூபாய் நோட்டை நீட்டி மீதிச் சில்லறைக்காகக் கைநீட்டி நின்றான் அப்பாசாமி.

"மதராஸ் பஸ்ஸுக்குப் போறீங்களா?" என்று கேட்டுக் கொண்டே கிழவன் மீதிச் சில்லறையைக் கொடுத்தான். அப்பாசாமிக்கு விழி பிதுங்கியது. அவன் கையில் பதினெட்டு ரூபாய் எண்பது பைசா இருந்தது. இரண்டு ரூபாய் நோட்டை இருபது ரூபாய் நோட்டு என்று எண்ணி மீதிச் சில்லறையைக் கொடுத்திருந்தான் கிழவன். நிறம் சரி, ஒரு சைபர் குறைவதையும் கிழவனின் சாளேசுவரக் கண்கள் கவனிக்காது விட்டிருக்கலாம். ஆனால் நோட்டின் அளவு — நீள அகலம்கூடவா தெரியாமல் பிசகிப் போகும்?

அப்பாசாமியின் மனம் இறுக்கம் காட்டியது. 'இன்று நாம் நரி முகத்தில்தான் விழித்திருக்கிறோம்' என்று எண்ணியவனாக நடையை எட்டிப் போட்டுப் பேருந்தில் ஏறி அமர்ந்தான். அது புறப்பட எட்டு நிமிஷங்கள் பாக்கி இருந்தன. அது அவனுக்கு எட்டிக் காயாகக் கசந்தது! ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாக, இல்லை, இல்லை! கல்பாந்தமாகப் போவது போலிருந்தது! கிழவன் விழித்துக் கொள்ளுமுன் வண்டி புறப்பட்டுவிட வேண்டுமே என்று வேண்டாத தெய்வங்களையெல்லாம் வேண்டினான்.

அவன் விழிகள் பரபரத்து நொடிக்கு ஒரு முறை கிழவனையும் பேருந்தையும் மாறி மாறிப் பார்த்துப் புகைத்தன.

'அட! அந்தக் கிழவன் எழுந்திருக்கிறானே, எதற்கு? ஐயோ! இந்தப் பேருந்தை நோக்கியா வருகிறான்? இங்கு வந்து இத்தனை பேருக்கும் எதிரில் என் மானத்தை வாங்கிவிடப் போகிறான்!'

"தம்பி! உங்களைத்தானே?" கிழவன் அப்பாசாமியை அடையாளம் கண்டு கொண்டு கூப்பிட்டுவிட்டான்.

அப்பாசாமிக்கு உயிரே போய்விட்டது!

"வண்டிக்குவருகிற அவசரத்திலே இந்தப் படம் பிடிக்கும் கருவியைக் கடையிலேயே விட்டுவிட்டு வந்துட்டீங்களே! ஊருக்குப் போனபின் நினைவு வந்தால், உங்கள் மனம் என்ன பாடுபடும்? இந்தாங்க, உங்கள் காமிரா! ஜாக்கிரதை, ஜாக்கிரதை, ஜாக்கிரதை!" என்று ஒரு தரத்துக்கு மூன்று தரமாகக் கூறித் திருப்பித் தந்தான்.

அப்பாசாமிக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது ஒருபுறம். போன உயிர் திரும்பியது மறுபுறம்; தன்னைப் பார்ப்பவர்கள், தன்னைப் பெரிய புகைப்படக் கலைஞன் என்று எண்ண வேண்டும் என்ற நப்பாசையில் அயல்நாட்டுப் பொருளான விலை உயர்ந்த இந்தக் காமிராவை நண்பனுக்கு நண்பன் ஒருவனிடமிருந்து இரவல் வாங்கி வந்திருந்தான். இது போய்விட்டால், அவனுக்கு எப்படிப் பதில் சொல்வது? ஈட்டுத் தொகையை எப்படித் தருவது என்பதை நினைத்துப் பார்த்தபோது, அவனுக்குத் தேள் கொட்டினாற்போல் இருந்தது!

கிழவனின் உயர்ந்த உள்ளத்தை நினைத்தவன், கிழவனின் பணத்தை எப்படியாவது அவனிடம் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்று துறுதுறுத்தான். தன் கடமை முடிந்தது என்று திரும்பிய கிழவனைக் கூப்பிடவும் வாய் எடுத்தான். அதற்குள் பேருந்து பேரொலி எழுப்பிக் கொண்டு பட்டென்று புறப்பட்டுவிட்டது!

—குறும்பன்

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைட்டமின்களும் தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை

TTT SQUIBB
VIMGRAN
MULTIPLE VITAMINS-MINERALS TABLETS
SARABHAI CHEMICALS

## அவை போதுமான அளவில் கிடைக்கின்றனவா?

வைட்டமின்கள் மற்றும் தாதுப்பொருள்களின் பற்றுக்குறை குடும்ப ஆரோக்கியத்தைப் பாதிக்கக் கூடும். சோர்வு, ஜல தோஷம், பசியின்மை, உடல் இளைத்தல், சரும மற்றும் பல் உபாதைகளுக்குக் காரணம் இவற்றின் பற்றுக்குறைதான்.

திட்டமிடப்பட்ட உணவில் கூட இக்குறை காணப்படுகிறது. அவ்வாறின்: குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும் தேவையான அளவில் இந்த இன்றியமையாத சத்துக்கள் கிடைக்க தினம் விம்க்ரான் கொடுங்கள்.

விம்க்ரானில் 11 முக்கிய வைட்டமின்களும் 8 தாதுப் பொருட்களும் அடங்கியுள்ளன. இரும்புச் சத்து—இரத்தப் பெருக்கத்திற்கும், கருகருப்பிற்கும், கால்ஷியம்—எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வைக்கவும், வைட்டமின் 'ஸி—ஜல தோஷத்தை எதிர்க்கும் சக்தியை அதிகரிக்கவும், வைட்டமின் ஏ—சிறந்த கண்பார்வைக்கும் ஆரோக்ய சருமத்திற்கும், வைட்டமின் பி12—பசியைத் தூண்டி, தாங்கும் சக்தியை அதிகரிக்கும் இவற்றுடன் இதர போஷாக்குச் சத்துக்களும் உள்ளன. இன்று முதல் தினம் உட்கொள்வீர்—விம்க்ரான்!

# விம்க்ரான்®

பலவேறு வைட்டமின்-தாதுச் சத்து மாத்திரைகள்
11 வைட்டமின்கள் + 8 தாதுப் பொருட்கள்



TTT® SQUIBB®
SARABHAI CHEMICALS PVT. LTD.

® இ.ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேட்டட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். எஸ்.சி.பி.எல். இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

**ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது**

Shilpi-HPMA 2A/74 Tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)

# பண்டைய நாகரீகத்தின் மறுமலர்ச்சி

அன்றைய குஜராத்தி மரபினைப் பின்பற்றி சேலை அணியும் பாணி இன்று மீண்டும் மங்கையரிடையே உலவத் தொடங்கி உள்ளது. அதுவும் அணிந்திடும் சேலை மபத்லாலின் 'மெஃப்ரின்' 100% பாலியெஸ்டர் சேலையாக இருக்குமே எனில், அழகு முழுமை பெற்று முறுவலிக்கிறது!

'மெஃப்ரின்' பாலியெஸ்டர் சேலைகள் பண்டைய கற்பனைகளுக்கு, நவீன ஒயிலோடு கூடிய வண்ணம், வடிவம் மற்றும் நெசவின் நேர்த்தியை கலந்திழைத்து, கிளர்ச்சியூட்டும் மறுமலர்ச்சியை அளிக்கின்றன!



**மபத்லால் க்ரூப் அளிக்கும்**
**நேர்த்தியான துணிமணிகள்**

***மெஃப்ரின்***

**பாலியெஸ்டர் சேலைகள் மற்றும்**
**உடுப்புத் துணிகள்**